Regd. M. No. 5934 Phone No. 21841

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம் JANASAKTHI

(காலைப் பதிப்பு)



மலர் 16 இதழ் 122] சென்னை 19-12-59 விகாரி௵ மார்கழி௴ 4௳ சனிக்கிழமை [4 பக்கங்கள் 7 காசுகள்

# பிரதமர் நேருவுக்கு சூ யென்-லாய் கடிதம்

## டிச. 26-ந் தேதி இந்திய-சீன எல்லை பற்றிப் பேச்சுவார்த்தைகள் தொடங்க விருப்பம்

### பாதுகாப்புத் துறையில் தன்னிறைவு பற்றி நேரு

புதுடில்லி, டிச. 19—

"பாதுகாப்பைப் பொறுத்த வரையில் "தன்னிறைவு பெறுவது" என்ற சொல் மிகப்பெரும் சொல்லாகும். எந்த விஷயத்திலும் தன்னிறைவு பெறுவதென்பது பெரிய விஷயமாகும்" என்று பிரதமர் நேரு ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் கூறினார்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில், பாதுகாப்புத் துறையில் தன்னிறைவு பெறும் அளவில், பாதுகாப்பு நிறுவனங்கள் விரிவு படுத்தப்படுமா என்று கேட்கப்பட்ட கேள்விக்கே மேற்கண்டவாறு பதிலளித்தார்.

அவர் மேலும் கூறுகையில், "எந்த நாடும் எப்பொழுதும் தன்னிறைவு பெற்றிருக்க முடியாது. ஏனெனில் ஒரு நாடு தன்னிறைவு பெற முயற்சிக்கும் பொழுது, ஏதாவது புதிய சம்பவங்கள் நிகழ்கின்றன. பொதுவாக தன்னிறைவு பெற வேண்டுமென்று தான் விரும்புகிறோம்; முயற்சிக்கிறோம்" என்று கூறினார்.

### படைகளை வாபஸ் பெறுவது பற்றிக் கலந்து பேசலாம் என்கிறார்

### ரோந்துப் படைகள் அனுப்பப்பட மாட்டாது எனத் தகவல்

பீகிங், டிச. 18—

சீன-இந்திய எல்லைத் தகராறு சம்பந்தமாகப் பாரதப் பிரதமர் நேருவுடன் டிச. 26-ந்தேதி பேச்சுவார்த்தைகள் தொடங்கத் தாம் ஆயத்தமாக இருப்பதாகச் சீனப் பிரதமர் சூஎன்-லாய் தெரிவித்துள்ளார். இதையொட்டி அவர் பிரதமர் நேருவுக்கு ஒரு கடிதம் எழுதியுள்ளார். இக்கடிதத்தில் ரோந்துப் படைகள் அனுப்புவதை நிறுத்த வேண்டும் என்று முன்பு நேரு முன்வைத்துள்ள ஆலோசனையை சூஎன்-லாய் வரவேற்றிருக்கிறார். ரோந்துப் படைகளை அனுப்பக்கூடாது என்று சீன சர்க்கார் தமது எல்லைக் காவற்படைகளுக்கு ஏற்கனவே உத்தரவு போட்டுவிட்டதாக அவர் இக்கடிதத்தில் குறிப்பிடுகிறார்.

தகராறுக்குரிய எல்லையிலிருந்து எவ்வளவு தூரத்திற்கு இருநாட்டுப் படைகளும் வாபஸாக வேண்டும் என்பது குறித்து இரு நாடுகளும் கலந்தாலோசனை நடத்தவேண்டும் என்று அவர் குறிப்பிடுகிறார்.

இந்த ஆலோசனைகளைக் கொண்ட கடிதம் நேற்றுச் சீனப் பிரதமரால் நேருவுக்கு அனுப்பப்பட்டுள்ளதாக நவசீன செய்தி ஸ்தாபனம் அறிவிக்கிறது. பிரதமர் நேரு நவம்பர் 16-ந்தேதி அனுப்பிய கடிதத்திற்குப் பதிலே இந்தக் கடிதம்.

சீனாவில் எங்கு வேண்டுமாயினும் சந்திக்கலாம். அல்லது ரங்கூனில் சந்தித்துப் பேசலாம் என்று சூஎன்-லாய் தமது கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

எல்லைப் பகுதி முழுவதிலிருந்தும் வாபஸாவது சம்பந்தமாக ஓர் உடன்பாடு ஏற்படும் வரையில் சீனா நேருவின் ஆலோசனையை ஏற்று ஓர் அளவுக்குப் பரிகாரம் காண்பதற்குத் தயாராக இருக்கிறது என்று அவர் தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார். லாங்ஜூவில் படைகள் இருக்கக்கூடாது என்று நேரு கோருவது போலவே எல்லையில் தகராறுக்குரிய இதர இடங்களிலும் படைகளை வைத்திருக்கக்கூடாது என்பதே அந்த யோசனை.

இவ்வாறு தகராறுக்குரிய பகுதிகளில் இருநாடுகளையும் சேர்ந்த எந்தப் படைகளும் இருக்கக் கூடாது என்பதே சீன சர்க்காரின் யோசனை.

எல்லை முகாம்களிலிருந்து ரோந்துப் படைகள் அனுப்பப்படுவது நிறுத்தப்பட வேண்டும் என்று இந்தியா முன் வைத்துள்ள யோசனையையும் சீனா வரவேற்கிறது. வாஸ்தவத்தில் ரோந்துப் படைகள் எதையும் அனுப்ப வேண்டாம் என்று எல்லைக் காவற்படைகளுக்கு சீன சர்க்கார் ஏற்கனவே உத்தரவிட்டுவிட்டது.

இரு நாட்டுப் படைகளும் தகராறுக்குரிய எல்லையிலிருந்து முறையே 12 மைல்கள் பின் வாங்க வேண்டும் என்ற சூ என்-லாயின் யோசனையை பிரதமர் நேரு ஏற்கவில்லை, அவரது நவ. 16ந் தேதி கடிதத்தில் தகராறுக்குரிய லடாக் பகுதியிலிருந்து எல்லா இந்திய-சீனப் படைகளும் வாபஸாக வேண்டும்—இந்தியப் படைகள் சீனா சரி என்று கூறும்எல்லைக்குகீழும் சீனப்படை இந்தியா சரி என்று உரிமை பாராட்டும் எல்லைக்கு மேலும் வாபஸாக வேண்டும் என்றே நேரு கோரியிருந்தார்.

இந்தியாவின் வடகிழக்கு எல்லையில்லாங்ஜூவிலிருந்து சீன படைகள் வாபஸாக வேண்டும் என்றும் ஆனால் இந்தப் பகுதியை மீண்டும் இந்தியப் படைகள் பிடித்துக் கொள்ளாது என்றும் நேரு கூறியிருந்தார். இரு நாடுகளும் ரோந்துப் படைகளை அனுப்பக் கூடாது என்றும் தெரிவித்திருந்தார்.

இடைக்கால உடன்பாட்டிற்குப் பிறகு வசதியான இடத்தில் வசதியான சமயத்தில் சூஎன்-லாயும் தாமும் சந்தித்துப் பேசலாம் எனவும் அவர் எழுதியிருந்தார்.

1956-ம் வருடத்தில் பிரசுரமான சீன தேசப்படம்—நேரு குறிப்பிட்டுள்ளது—லடாக் பிரதேசத்தில் இரு நாடுகளுக்கும் இடையே பரம்பரையாக இருக்கும் எல்லையைச் சரியாகக் காட்டுகிறது. எனவே ஒவ்வொரு நாடும் மற்ற நாடு அங்கீகரித்துள்ள எல்லைக்குப் பின்னால் படைகளை வாபஸ் பெறுவது என்ற யோசனை நியாயமல்ல என்று சூஎன்-லாய் குறிப்பிடுகிறார்.

உண்மை தெரியாதவர்கள் இது நியாயம் என்று எண்ணுவார்கள். ஆனால் இதன் பிரகாரம் பார்த்தால் இந்தியா விட்டுக் கொடுப்பது என்பது வெறும் சொல்லளவில்தான் இருக்கும். ஏனெனில் இந்தப் பகுதி இந்தியாவுக்குச் சேர்ந்ததல்ல இந்தியப் படைகள் எதுவும் இங்கில்லை.

மாறாக சீனா சுமார் 12,500 சதுரமைல் சீனாவுக்குரிய பிரதேசத்திலிருந்து வாபஸ்பெற நேரும் என்று அவர் சுட்டிக் காட்டுகிறார்.

சரித்திரபூர்வமாக நேர்மையுடன் பார்க்கும்போது நம்மிரு நாடுகளுக்குமிடையே எல்லைகள் என்று என்றுமே வரையறுக்கப் படவில்லை என்பது தெரியும். இதை மறுக்க முடியாது.

சமீப காலத்தில் இவ்வாறு வரையறுக்கப்படாதிருந்த எல்லையைத் திடீரென்று மாற்றி கிழக்கிலும் மேற்கிலும் வரையறுத்துத் தேசப்படங்களை இந்தியா எப்படிச் செயல்பட முடிந்தது என்பதற்கான அடிப்படைகளைச் சீன சர்க்காரால் பார்க்க முடியவில்லை.

செப். 26-ந்தேதி தாங்கள் எழுதிய கடிதத்தில் கொடுக்கப்பட்டுள்ள ஏராளமான புள்ளி விபரங்களை எல்லாம் நான் விபரமாக ஆராய்ந்து பரிசீலித்தேன். ஆயினும் ஒரு திருப்திகரமான பதிலை எனக்குக் காணமுடியவில்லை என்று அவர் எழுதியுள்ளார். (செய்தி முடியவில்லை)

### சூ.வின் ஆலோசனை மீது அபிப்பிராயம் கூற நேரு மறுப்பு

புதுடில்லி, டிச. 19—

டிசம்பர் 26-ம் நாள் சீனாவில் எங்காவது ஒரு இடத்தில் அல்லது ரங்கூனில் சந்தித்துப் பேசலாம் என்று சீனப் பிரதமர் சூ யென்-லாய் ஆலோசனை கூறியிருக்கிறாரல்லவா? அதன் மீது எவ்வித அபிப்பிராயமும் கூற நேரு மறுத்துவிட்டார்.

சீனப் பிரதமரின் கடிதத்தை தாம் ஆழ்ந்து பார்க்கவில்லையென்றும் கூறினார்.

சீனப் பிரதமரின் கடிதம் சந்தித்துப் பேசுவதற்கு ஒரு அடிப்படை அமைத்திருக்கிறதல்லவா என்றுகேட்கப்பட்ட கேள்விக்கு முதலில் நேரு பதிலளிக்கவேயில்லை. பீகிங்கிலுள்ள இந்தியத் தூதுவரிடமிருந்து இன்று காலைதான் கடிதம் கிடைத்தது என்றும் கூறப்பட்டது.

சோவியத் நாட்டின் பொருளாதார உறவு இலாகா தலைவர் ஸ்காசிகாவ் தலைமையில் 6 உறுப்பினர்கள் கொண்ட தூதுக்குழு இந்தியாவுக்கு வந்துள்ளது. குழுத் தலைவர் மந்திரிகள், கே. டி. மாளவியா, சுவரன் சிங் இருவருக்கு மிடையில் நிற்கிறார்.

## அடுத்த ஆந்திர முதலமைச்சர் யார்?

### காங்கிரஸிற்குள் பூசல்

### மேலிடத்திடமும் மோதல்

ஹைதராபாத், டிச. 19—

ஆந்திர முதலமைச்சர் சஞ்சீவி ரெட்டி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டாரல்லவா? ஆந்திர சட்ட மன்ற காங்கிரஸ் தலைவர் பொறுப்பிலிருந்து அவர் உடனடியாக ராஜினாமாச் செய்யக் கூடாதென்று சட்டமன்ற காங்கிரஸ் குழு தீர்மானித்துவிட்டது. ஆனால் காங்கிரஸ் தலைமைப் பீடம் உடனடியாக சஞ்சீவி ரெட்டியை பொறுப்பிலிருந்து விடுவிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டுள்ளதாகத் தெரிகிறது.

அடுத்த முதல் மந்திரியாக யாரைத் தேர்ந்தெடுப்பது என்பதில் பலத்த வாக்குவாதங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. பிரமானந்த ரெட்டி என்பவர் தான் முதலமைச்சராக வேண்டுமென்று சஞ்சீவி ரெட்டி கூறுகிறார். ஆனால் அ. இ. காங்கிரஸ் கமிட்டி காரியதரிசிகளில் ஒருவராகிய அல்லூரி சத்திய நாராயணராஜூவிற்கு மேலிடத்தின் ஆசீர்வாதம் இருப்பதாகத் தெரிகிறது. இதனால் பெங்களூரில் நடைபெறப் போகும் அகில இந்திய காங்கிரஸ் மாநாட்டின் தலைமையுரையை திருமதி இந்திரா காந்தி அம்மையாரே படிக்க நேரிடும் என்று கூறப்படுகிறது.

ராஜூ எக்காரணங்கொண்டும் முதலமைச்சராக வரக்கூடாது என்பதே சஞ்சீவி ரெட்டியின் தீர்மானம். இதற்காக அவர் தனது அபேட்சகரை வாபஸ் பெற்று மூன்றும் மனிதராக ஒரு தெலிங்கானா பிரமுகருக்கு முதலமைச்சர் பதவியைத் தானமாகத் தரவும் துணிந்திருக்கிறாராம்.

### விவசாயப் பல்கலைக் கழகம்

ஹைதராபாத், டிச. 17—

ஆந்திர ராஜ்ய சர்க்கார் ஒரு விவசாயப் பல்கலைக் கழகம் நிறுவ முடிவு செய்திருக்கிறது.





## இந்திய எல்லைக்குள் அந்நிய விமானங்கள் பறக்கவில்லை

### ஆதாரமில்லாது கேள்வி கேட்பவர்களுக்கு மேனன் சூடு

புதுடில்லி, டிச. 19—

"இந்திய எல்லைக்குள் அடையாளம் தெரியாத விமானம் எதுவும் பறக்கவில்லை" என்று பாதுகாப்புத் துறை அமைச்சர் கிருஷ்ணமேனன் நேற்று மக்கள் சபையில் ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் கூறினார்.

அவர் மேலும் கூறுகையில், "நேபா பகுதியிலும், அஸ்ஸாம் மாநிலத்தில் காமரூப் மாவட்டத்திலும் அடையாளம் தெரியாத விமானங்கள் பறந்தனவென்று கூறுவதற்கு எவ்வித ஆதாரமும் இல்லை. இப்படிப்பட்ட விஷயங்களில் கவனமாகஇருப்பதை நான் பாராட்டுகிறேன். ஆனால் பத்திரிகைகளில் வந்த செய்திகளையும், அதிகார பூர்வமில்லாத செய்திகளையும் ஆதாரமாகக் கொண்டு பல கேள்விகள் கேட்கப்பட்டுள்ளன என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன். அரசாங்கத்தைப் பொறுத்த வரையில் இப்படிப்பட்ட விஷயங்களில் விழிப்பாகத்தான் இருக்கிறது. இந்திய எல்லைக்குள் அத்துமீறி அந்நிய விமானங்கள் பறக்குமானால், சூழ்நிலைக்கேற்றவாறு தகுந்த நடவடிக்கைகள் எடுக்கப்படும்" என்று கூறினார்.

### ஆந்திராவின் தலைநகர் கர்னூலாம்!

#### மேற்கு வங்க அரசின் அறியாமை

ஹைதராபாத், டிச. 19—

ஆந்திர மாநிலத்தின் தலைநகர் ஹைதராபாத் என்பது மேற்கு வங்க அரசாங்கத்திற்குத் தெரியாது என்ற ருசிகரமான செய்தி வெளியாகியுள்ளது!

ஆந்திர மாநிலத்தின் தலைநகர் கர்னூல் என்று இதுவரை கருதியிருக்கிறது! ஆந்திர மாநில சட்டமன்ற உறுப்பினர்களுக்கு அனுப்பிய சில முக்கியமான தபால்கள் கர்னூல் முகவரிக்கே அனுப்பப்பட்டிருக்கின்றன.

### கொழும்பு நகரசபை தேர்தல் இன்று நடைபெறுகிறது

கொழும்பு, டிச. 19—

கொழும்பு நகர மன்றத் தேர்தல் இன்று ஆரம்பமாகிறது. 87 உறுப்பினர்கள் அங்கம் வகிக்கும் மன்றத்திற்கு 152 அபேட்சகர்கள் போட்டியிடுகிறார்கள்.

## எழுத்தாளர்களுக்கு ராஜாஜி புத்திமதி

### வாழ்க்கை அனுபவம் பெற்ற பின்னரே எழுதவேண்டும்

சென்னை, டிச. 19—

அகில இந்திய எழுத்தாளர் மகாநாட்டில் பேசுகையில் ராஜாஜி "எண்பது வயதான முதியவர்" என்ற முறையில் எழுத்தாளர்களுக்கு ஐந்து "கட்டளைகளை" யோசனைகளாக வழங்கினார்.

ராஜாஜியின் கட்டளைகளாவன:

1. பள்ளிப் படிப்போ கல்லூரிப் படிப்போ முடிந்தவுடன் எழுத்தாளர்களாக மாறி விடாதீர்கள். நல்ல உத்தியோகம் ஒன்று பார்த்து, வாழ்க்கை அனுபவம் பல ஆண்டுகள் பெற்று, எழுத வேண்டும். வாலிப மனதில் தோன்றின முறுக்கு தீவிரம் குறையாமல் பல ஆண்டுகள் கழிந்தும் இருக்குமானால், பின்னர் எழுதத் தொடங்குங்கள்.

2. உங்கள் எழுத்தின் முதலும் முடிவானதுமான கருத்து எழுத்து அல்ல, எண்ணமதான. நீங்கள் மக்களுக்காக எழுதும்போது எண்ணங்களை கருத்துக் குவியல்களை தரவேண்டும். தர்மம் (அறம்) அர்த்தம் (பொருள்) காமம் (இன்பம்) இவற்றில் எதைப் பற்றி எழுதினாலும் மக்கள் அறிவு பெற்று நல்வாழ்வு வாழும் வகையில் புத்திமதி கூறுவதாக உங்கள் படைப்பு இருக்க வேண்டும்.

(3) எழுத்தாளர்களாகிய நீங்கள் "தொழிற் சங்கம்" பற்றி சிந்திக்கக் கூடாது!

கலைஞர்கள், அதிலும் படைப்புக் கலைஞர்கள், தொழிற் சங்கம் அமைத்தால் வளரும் கவிஞர்களுக்கு வாய்ப்பே இல்லாது போய்விடும். எவ்வளவோ பிரசுரிப்பாளர் புதுப்புது எழுத்தாளர்களைத் தூண்டிவிட, உற்சாகமூட்ட காத்திருக்கிறார்கள், இப்போது. தொழிற்சங்க உரிமை பேசினால் ஒருவேளை இப்போதிருக்கும் எழுத்தாளரின் வாழ்க்கை நிலை உயரலாம், ஆனால் பரந்த அடிப்படையில் எழுத்தாள சமுதாயம் விஸ்தரிப்பது முடியாது போய்விடும்.

4. எழுதும் நடையில் புதிய திருப்பம் காண நீங்கள் முயல வேண்டும். படிக்கும் மக்கள் மிகவும் பாமரர்கள் என்று நினைத்து, ஒரு விஷயத்தைக் கூட விடாமல், பச்சையாகச் சொல்லுவது காலத்துக்கு ஒவ்வாத நடை.

சொல்ல வேண்டியதை நாகரீக முறையில் சுருங்கச் சொல்லி சூசகமாக பொருளை மக்களே அறிந்து கொள்ளும்படி விடுவது காலத்துக்கேற்ற நடை.

பாதி விஷயத்தைச் சொல்லி மிகுதியை மக்களே உணர்ந்து கொள்ளும்படி விடுவதுதான் நல்லது.

5. உங்களில் பலர் விமர்சக எழுத்தாளர்கள். அவர்களுக்கு ஒரு வார்த்தை. கண்டனம் செய்வது விமர்சகர் தனி உரிமை. ஆனால் கண்டனம் செய்வதில் கடுமை வேண்டாம். ஒருவர் மீது அவர் எழுத்து, நடை மீது வெறுப்பு ஏற்பட்டு, பொறாமை

(4-ம் பக்கம் பார்க்க)

ஜனசக்தி

சென்னை 19-12-1959

# ஐஸன்ஹோவர் விஜயம்

ஜனதிபதி ஐஸன்ஹோவரை இந்தியாவில் லட்சக் கணக்கான மக்கள் வரவேற்றனர். அவரைக் காண டில்லியின் சாலைகளிலும் சதுக்கங்களிலும் மக்கள் திரண்டு கூடியிருந்தனர்.

செல்வத்திற்கும் தொழில் அபிவிருத்திக்கும் புகழ் பெற்ற ஒரு நாட்டின் அதிபரைக் காணவும் அவர் கூறுவனவற்றைக் கேட்கவும் மக்கள் விரும்பினர். மக்களுக்கு ஒரு துடிப்பு, விநோதத்தை அறிந்து கொள்ள விரும்பும் ஆவலைப் போல.

சமாதானம், நட்பு, கெடுபிடிப் போருக்கு முற்றுப் புள்ளி, ஆயுத ஒழிப்பு ஆகியவை பற்றி அமெரிக்கத் தலைவர் பேசுவதைச் செவிமடுக்க வேண்டுமென்பதே அந்த விருப்பம். வல்லரசுகளின் உச்சகட்ட மாநாடு கூடி, மனித குலத்திற்குப் போர் என்கிற அபாயமே இனி இருக்காதபடி வழிகாண வேண்டும், உலக மக்கள் தங்கள் ஆற்றலையும் இயந்திர சாதனங்களையும் பயன்படுத்தி மனித குல சுபீட்சத்திற்கும் வறுமை ஒழிப்புக்கும் பாடுபட வேண்டுமென்று மக்கள் ஆவல் கொண்டிருக்கின்றனர். எனவே மக்கள் திரளாகக் கூடினர்.

இந்தியாவில் ஜனதிபதி ஐஸன்ஹோவரின் பேச்சுகளும் அறிக்கைகளும் சமாதானத்தையும் நட்பையுமே வலியுறுத்தின. பார்லிமெண்டு உறுப்பினர்களிடை அவர் பேசுகையில், "அரசாங்கங்களுக்குப் பயனில்லாத செலவுச் சுமை ஏற்பட்டுக்கொண்டே போகிறது... இன்றைய நாசகரமான ஆயுதங்களுக்கு எதிராக, பாதுகாப்புக்காக ராணுவமென்பது பொருளற்றதாகும்," என்றார்.

சமாதானத்திற்கு உலக மக்களின் பேராவலைக் குறிப்பிட்டு, அவர் தொடர்ந்து கூறியதாவது: "இந்த நவீன ஆயுதங்கள் எதற்காக என்பது பற்றிய ஐயங்கள் நெருக்கடியை அதிகப்படுத்துகின்றன. சமாதான முறையில் வளர்ச்சி காணும் வாய்ப்பை மக்கள் பறி கொடுக்கின்றனர், நீதி, நல்லெண்ணம் கலந்த சமாதானத்திற்கு ஆவல் தீவிரமடைகிறது."

இதற்குப் பரிகாரமாக "உலகம் முழுவதிலும் ஆயுத ஒழிப்பு காணுவதே இன்றைய தேவை". என்றார் அமெரிக்க ஜனதிபதி.

"மனித குலத்தின் பெயரால், அவநம்பிக்கையையும் ஐயங்களையும் போக்க ஐந்தாண்டு. இல்லை ஐம்பதாண்டு திட்டமொன்றில் நாம் ஒன்று சேரக்கூடாதா? உலகில் நிலவும் நெருக்கடிக்கு மூலவேரை அகற்றுவதில் நாம் ஈடுபட வேண்டாமா?" என்று வினவினர் ஐஸன்ஹோவர்.

இவர் பேச்சு சமாதான சக வாழ்வுக்கு அடிப்படையான நல்ல வளர்ச்சிகளே.

ஆனல் இந்தச் சமாதான, நட்பு உணர்ச்சி ஒரே ஓட்டமாகவோ மாசற்றதாகவோ இருக்கவில்லை. டல்லஸும் அவரது கெடுபிடிப் போர் முறையும் தோல்வியுற்றன. ஆனல் கெடுபிடிப் போருக்கு இல்லை. போருக்கே வித்தாக அமைந்துள்ள வழி முறைக்கு ஜனதிபதி மீதுள்ள பிடி தளரவில்லை.

அப்படியில்லாவிட்டால் அவர் கொரியா போர் குறித்து குறிப்பிட்டிருக்கமாட்டார். டல்லஸின் கொள்கைக்கும் யுத்த வெறியர்களுக்கும் படுதோல்வியே ஏற்படுத்தியது அக் கொரியப் போரல்லவா?

முதலாளித்துவ மேலை நாடுகளுக்கு மட்டுமே சுபீட்சம் ஏற்பட வேண்டுமென்ற தொனியுடன் 'சுதந்திர உலகம்' என்று குறிப்பிட்டதை ஐஸன்ஹோவர் தவிர்த்திருக்கக்கூடும். நமது (இந்தியாவின்) பொருளாதார வளர்ச்சிக்குரிய திட்டங்களை நிறைவேற்றும்போது 'நிர்ப்பந்தம்' கூடாதென்று நமக்கு உபதேசம் செய்திருக்க வேண்டிய தேவையும் இல்லை. சுதந்திரத்தை அடிப்படையாகக் கொண்ட சமாதானத்தை மட்டுமே ஆதரிக்க வேண்டுமென்று அவர் கூறினர், அதன் பொருள் என்ன? சோஷலிஸ்ட் உலகத்துடன் சமாதான சக வாழ்வு என்பது சுதந்திரத்திற்கு முரணனதென்ற பழைய பல்லவியை அவர் பாடுகிறாரா? இன்று பல ஆப்ரிக்க நாடுகள் அடிமை வாழ்விலிருந்து விடுதலையையே கோருகின்றன வென்றும் விடுதலையடைந்த பின்பே அந்நாடுகள் வேறெந்த விஷயத்தைக் குறித்தும் பேசக் கூடுமென்றும் பிரதமர் நேரு, ராம்லீலா மைதானத்தில் கூறியது போலவே ஐஸன்ஹோவர் கூறுகிறாரா? ஐஸன்ஹோவர் மனத்திலும் அவரது அரசாங்கத்திலும் கெடுபிடிப் போர், காலனி ஆட்சி என்ற பழைய கொள்கைக்கும் சமாதானம், உலகமெங்கும் ஆயுத ஒழிப்பு, ஒடுக்கப்பட்டவருக்கு சுபீட்சம், 'சுதந்திரம்' என்ற புதிய கொள்கைக்கும் மோதல் ஏற்பட்டிருக்கிறது.

இந்தியாவில் பிற்போக்கு சக்திகள் எதிர்பார்த்ததற்கு மாறாக, பிரதமர் நேரு சிகரத்திலிருந்து இறங்கி வர மறுத்து விட்டார், சுதந்திரம், வல்லரசு கோஷ்டிகளில் சேராமலிருப்பது, நிபந்தனையற்ற சமாதானம் என்ற லட்சியங்களின் உறைவிடமான தார்மீக சிகரத்திலிருந்து நேரு இறங்க மறுத்து விட்டார், சீனவை அல்லது கம்யூனிஸத்தை எதிர்த்து இந்தியாவுக்கு உதவி செய்வதாக உடன்பாடு ஏற்படவில்லை. இந்தியாவின் அபிவிருத்தித் திட்டத்திற்காக இந்தியா யாசகம் கேட்கவுமில்லை. இதனல் ஏமாற்றமடைந்திருந்த பிற்போக்கு சக்திகளைத் திருப்தி செய்ய, மேலே சொன்ன பிரச்சினைகள் இரு தலைவர்களால் விவாதிக்கப்பட்டதாக ஜனதிபதியின் ஆலோசகர் அறிவித்தார். நேரு அதை மறுத்தார். ஐஸன்ஹோவரின் வருகையால் வலதுசாரி பிற்போக்காளருக்கு இழப்பு எதுவுமில்லாவிட்டாலும், அவர்கள் விரும்பியது கிட்டவில்லை,

ஒரு முக்கிய விஷயத்தில ஜனதிபதி ஐஸன்ஹோவர் 'பண்பாடற்ற முறை'யில் பின்வருமாறு பேசிவிட்டார்: "ஒரு நாடு தனது சுதந்திரத்தைப் பாதுகாத்துக்கொள்ள சிறந்த சாதனம் வெளிநாடுகளிலுள்ள தனியாரிடமிருந்து கடன் உதவியே ஆகும்......"

பிரதமர் நேரு இவ்விதம் நாசுக்கற்ற முறையில் பேசவேமாட்டார்.

ஐஸன்ஹோவர் மேலும் கண்ணியக்குறைவுடன் கூறியதாவது: "ஒரு விஷயத்தைப் பற்றி நான் உறுதி கூறுவேன், இப்பொழுது முதல் நான் பேசப்போகிற ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் இந்தியாவில் முதலீடு போடவேண்டுமென்று வற்புறுத்துவேன். சுதந்திரம் பலப்படுவதற்கும் உலக சுபிட்சத்திற்கும் சாதகமாக, பெரும்அளவு முதலீடு செய்வதற்கு வாய்ப்பளிப்பதில் இந்தியா முதலிடம் பெற்றுவருவதாக நான் கூறுவேன்."

கடைசியாக அவர் டில்லியில் நகரசபை வாசித்துக் கொடுத்த வரவேற்புரைக்குப் பதிலளிக்கையில், அமெரிக்கக்குடியரசின் தலைவர் நமது நாட்டை டாலர்கள், ஆயுத உதவி இவை மூலம் பிடிக்க விரும்பும் பெரும் முதலாளிகளின் குரலில் பேசினர். சமாதானம், சுதந்திரம், நட்பு லட்சியங்களை வற்புறுத்திப் பேசிவிட்டு கடைசியில் இவ்விதம் முத்தாய்ப்பு வைத்துவிட்டார்,

சமாதான தூதர் என்று அமெரிக்க ஜனதிபதியை விளித்து வரவேற்ற தத்துவப் பேராசிரியர் உதவி ஜனதிபதி ராதாகிருஷ்ணன் "அமெரிக்க ஜனதிபதியே, லட்சிய ஒருமைப்பாடு ராணுவ உடன்பாடுகளை விட வலிமை வாய்ந்தது என்று அறிவுறுத்தத் தவறவில்லை.

அமெரிக்க ஜனதிபதி இந்தியாவுக்கு வந்து, சமாதானம் குறித்து நன்ருகப்பேசினர். பிரதமர் நேரு மகிழ்ச்சி அடைந்தார்.

ஆனல் ஐஸன்ஹோவர் திரும்பும் சமயம் டாக்டர் ராதாகிருஷ்ணனின் அறிவுரையை மறந்துவிட்டார். ஐஸன்ஹோவர், ஈரான் பார்லிமெண்டில் பேசுகையில் பாக்தாத் உடன்பாட்டிற்குப் பதிலாக ஏற்பட்ட புது ராணுவ உடன்பாட்டை பலமாக ஆதரித்தார்; மத்திய கிழக்கிலும் பாகிஸ்தானிலும் அமெரிக்க ஆயுதங்களைக் குவிக்கப்போவதாகவும் பேசினர். நம்பிக்கை உண்டு பண்ணிய ஆரம்பத்திற்கு இது அமங்களமான முடிவே. எனினும் உச்சகட்ட மகாநாடு பற்றிய நம்பிக்கை அகலவில்லை. அந்நம்பிக்கை நனவாகுமென்றே எண்ணுகிறோம். (நியூ ஏஜ்)

# விவசாயத்துறையில் போலந்தின் சாதனை

## பழைய பிரச்னைகளுக்குப் புதிய முறையில் தீர்வு

புதுடில்லி, டிச. 14—

புதுடில்லி உலக விவசாயக் கண்காட்சியில் பங்குகொள்ளும் ஒரு சில ஐரோப்பிய நாடுகளில் போலந்தும் ஒன்றாகும். இக்கண்காட்சியில் எழிலுற அமைப் பெற்றுள்ள போலந்தின் காட்சி மண்டபத்தில், போலந்தின் கிராமப்புறம் பற்றியும், அதன் பொருளுற்பத்தியின் பணி பற்றியும் சமுதாய அமைப்புபற்றியும் விரிவாக அறிந்துகொள்ளலாம். மேலும் முழுமையான தொழில் நிலையை கூட்டுக்கோப்புகள், விவசாய இயந்திரங்கள், இரசாயனப் பொருள்கள், விஞ்ஞானக் கருவிகள், ஆய்வுக்கூட சாதனங்கள் முதலிய இந்தியாவின் ஐந்தாண்டுத் திட்டத்திற்குத் தேவையான பொருள்களை மென்மேலும் கூடுதலாக இந்தியாவிற்கு ஏற்றுமதி செய்தளிக்கும் போலிஷ் இயந்திரத் தொழிலரங்கின் வாய்ப்புகள் பற்றியும் இங்கு பல விவரங்களை அறியலாம்.

### விவசாய உற்பத்தி பெருக்கம்

யுத்தத்திற்குப் பிறகு போலந்தில் நிறைவேற்றப்பட்டுள்ள நிலச்சீர்திருத்தமும் விவசாய நடைமுறையும் அரிய அனுபவங்களை வழங்கியுள்ளன. பயங்கரமான யுத்த சேதங்களுக்கிடையிலும் போலந்தானது ஒருசில ஆண்டுகளுக்குள் தனது விவசாயத்தைப் புனரமைத்து, விவசாய உற்பத்தியைப் பெருக்கியுள்ளது. யுத்த முற்காலத்தைவிட இன்று போலந்தின் நபர் விகித உற்பத்தி அளவு 41 சதவீதம் அதிகமாகும். இத்துடன் போலந்தில் விவசாயப் பண்டங்களின் உபயோகமும் பெருகியது. தனது பொருளாதார வளர்ச்சிக் கட்டத்தில் வேறு எந்த ஐரோப்பிய நாட்டின் விவசாயப் பண்டங்களின் உபயோகமும் இவ்வளவு அதிகமாக உயர்ந்ததில்லை என்பது குறிப்பிடத்தக்கது. உதாரணமாக, இறைச்சி, கொழுப்பு ஆகியவற்றின் நபர் விகித உபயோகம், யுத்த முற்கால நிலையை விட 2½ மடங்கு உயர்ந்தது: பால், பால் பண்டங்கள் ஆகியவற்றின் உபயோகம் 40 சதவீதமும் சர்க்கரை 150 சதவீதமும் உயர்ந்தன. கடந்த 15 ஆண்டுகளில் போலந்தில் ஏற்பட்டுள்ள சமுதாயப் பொருளாதார மாறுதல்களே இதற்குக் காரணம். இந்த மாறுதல்களை இரு தாப்புகளின் கீழ் பிரிக்கலாம்: ஒன்று, நிலச்சீர்திருத்தம், மற்றொன்று தொழில் வளர்ச்சி. இவை இரண்டும் நெருங்கிய பிணைப்பு உண்டு என்பது தெரிந்ததே.

### நிலச்சீர்திருத்தம்

புதிய சர்க்கார் மேற்கொண்ட முதல் நடவடிக்கைகளில் ஒன்று நிலச்சீர்திருத்தம், போலிஷ் பிரதேசத்தில் இன்னமும் யுத்தம் நடைபெற்றுக் கொண்டிருந்த போது, 1944 செப்டம்பர் 6-ந் தேதியன்று நிலச் சீர்திருத்தம் பிரகடனம் செய்யப்பட்டது. அதற்குப் பிறகு இரண்டு ஆண்டுகளுக்குள் இது அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது. ஏதோ பெயரளவில் ஒரு சிறு தொகையைப் பெற்றுக்கொண்டு, 10 லட்சம் விவசாயக் குடும்பங்களுக்கு 1½ கோடி ஏகர் நிலங்கள் வினியோகிக்கப்பட்டன. நிலத்தை இழந்த நிலப் பிரபுக்களுக்கு புனருவாழ்வு மான்யம் வழங்கப்பட்டது. இன்று போலந்திலுள்ள விவசாயிகளின் பண்ணைகளில் மூன்றில் ஒன்று, 1944-ம் வருடத்திய நிலச்சீர்திருத்தத்தின் போது ஏற்படுத்தப்பட்டதாகும். இத்தகைய தீவிரமான சீர்திருத்த நடவடிக்கைகளின் பயனாக, யுத்த முற்கால பேபலத்தில் இருந்து வந்த நிலச்சுவான்தார்களும் ஜமீன்களும் இன்று அடியோடு மறைந்து போயி, தனிக் குடும்பப் பண்ணைகள் இன்று போலந்தின் கிராமப்புறத்தில் தலையாய அம்சமாக மேலாதிக்கம் வகிக்கின்றன.

### தொழில் வளர்ச்சி

ஆனல், போரிய வேலையில்லாத லட்சக்கணக்கான மக்கள் இருந்து வந்தனர், போலந்தின் நிலப் பிரச்சினைக்கு—கிராமப்புற பிரச்சினைக்கு—நிலச் சீர்திருத்தத்தின் மூலம் மட்டும் தீர்வு கண்டு விட முடியாது. இப்பிரச்சினைக்குப் பரிகாரம், முடிவான பரிகாரம் நாட்டைத் தொழில்மயமாக்குவதே. புதிய தொழிற்சாலைகளின் நிறுவும் வேலையில் ஆண்டுதோறும் லட்சக்கணக்கானவர்களுக்கு வேலை கிடைத்தது. இந்தத் தொழிற்சாலைகள் கட்டி முடிக்கப்பட்டதும் அவர்கள் அவற்றிலேயே தொழிலாளர்களாக வேலைக்கு அமர்ந்தனர். இன்று போலந்தின் இயந்திரத் தொழில் பொருளுற்பத்தி, யுத்த முற்கால நிலையைவிட 6 மடங்கு அதிகமாகும். யுத்தமுற்காலத்தில் விவசாயத்தையே ஆதாரமாகக் கொண்டிருந்த போலந்தின்பொருளாதாரம் இப்பொழுது சக்தி வாய்ந்த சோஷலிச இயந்திரத் தொழிலின் ஆதாரமாகப் பெற்றுள்ளது. இந்நிலையில், விவசாயம் பூராவையும் படிப்படியாக சோஷலிசமயமாக்கும் பணி போலந்துக்கு எதிர்நோக்குகிறது. இதைச் சாதிப்பதற்கான பொதுவான வழி வெளிப்படை: அதாவது போலந்தின் விவசாயத்தினுடைய எதிர்கால வளர்ச்சி கூட்டுறவு பாணியிலேயே அமைந்திருக்க முடியும். ஆயினும் பல அசாதாரண சூழ்நிலைமைகளின் காரணமாக (1949-1954ல் மேற்கொள்ளப்பட்ட) கூட்டுறவுப் பண்ணைகளை நிறுவுவது சம்பந்தமான முதல் முயற்சிகள்—பரிசோதனைகள் அவ்வளவாக வெற்றியடையவில்லை. இதனல்தான் போலந்தின் இரு பிரதான கட்சிகளான போலிஷ் ஐக்கியத்தொழிலாளர் கட்சியும் ஐக்கிய விவசாயிகள் கட்சியும் 1956-57 பனிக் காலத்தில், கூட்டாக சேர்ந்து ஆலோசித்து, போலந்தின் நிலைமைகளுக்கும் வரலாற்று அனுபவத்திற்கும் போலந்தின் கிராமப் பொருளாதாரத்தின்கட்டுக்கோப்பிற்கும் ஏற்புடைய முறையில் மேற்படி லட்சியத்தை ஈடேற்றுவதற்கான ஒரு புதிய திட்டத்தை கண்ணோட்டத்தை உருவாக்கின. இத் திட்டப்படி விவசாய வட்டாரங்களை அமைப்பதற்கு பெரும் முக்கியத்துவம் அறிவிக்கப்பட்டது. இந்த விவசாய வட்டாரங்கள், இந்தியாவில் கூறப்படும் சேவா கூட்டுறவுகளுக்கு (Service Co-operatives) ஒப்பானவை இன்று இத்தகைய வட்டாரங்கள் சுமார் 22,000 வரை உள்ளன. இவற்றில் 6 லட்சம் விவசாயக் குடும்பங்கள் சேர்ந்துள்ளன. இந்த விவசாய வட்டாரங்கள் கூட்டுறவு முயற்சி பற்றிய நடைமுறை போதத்தை அளிக்கும் பள்ளிகளாக விளங்கி வளர்ந்துவரும் சோஷலிசத் தொழில்களால் மென்மேலும் அதிகமாக வழங்கப்பட்டுவரும் விவசாய இயந்திர சாதனங்கள், உரங்கள் ஆகியவற்றின் அடிப்படையில், உயர்வான விவசாய நுணுக்கங்களுடன் இயக்குவிக்கப்படும் உற்பத்தியாளர் கூட்டுறவுகள் அமைவதற்குப் படிப்படியாக உதவி செய்யும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இதற்கிடையில் தனது உற்பத்தியை 1965க்குள் 30 சதவீதம் உயர்த்துவதே போலந்தின் விவசாய அரங்கினுடைய அவசரக் கடமையாக அமைந்துள்ளது. விவசாயத்தை மேலும் தீவிரமாக இயந்திரமயமாக்க முற்படாமல் இதைச் சாதிக்க முடியாது.

### விவசாய மூலதன நிதி

விவசாய அரங்கிலிருந்து அரசாங்கத்திற்குக் கிடைத்துவரும் பெரும் தொகைகளை—வருவாய்களை—அப்படியே விவசாய மூலதன நிதிக்கு ஒதுக்கி வைப்பதென்று இவ்வாண்டின் தொடக்கத்தில் முடிவு செய்யப்பட்டது. விவசாய வட்டாரங்கள் தமக்கு வேண்டிய விவசாய இயந்திரங்களை வாங்கிக்கொள்வதற்கு அவசியமான கடன்களையும் மான்யங்களையும் பெறுவதற்கு இந்நிதி ஆதாரமாக அமைந்திருக்கும். இவ்வாறு இதுவரை விவசாயிகள் அரசாங்கத்திற்குக் கட்டாயமாக விவசாய விளைபொருள்களை ஒரு குறிப்பிட்ட அளவு வழங்குவதன் மூலம் செலுத்தி வந்துள்ள வரித் தொகைகள் யாவும், இப்பொழுது அவர்களுடைய சொந்த கிராமங்களுக்கே திருப்பி வழங்கப்படும். இவ்வாறு திருப்பி அளிக்கப்படும். நிதிகள் யாவும் அந்தந்த கிராமத்தின் விவசாயிகளின் நேரடி மேற்பார்வையின் கீழ், விவசாய மூலதனச் செலவுகளுக்காகப் பயன்படுத்தப்படும். ஒருமையாக அமையப்பெற்ற மத்தியத் திட்டத்திற்குப் பதிலாக, நிர்வாக—அதிகாரப் பரவல் அடிப்படையில், விவசாய மூலதனச் செலவுகளை நிர்வகிப்பதற்கான ஒரு புதிய, சிந்தனைத் திறன் மிகுந்த, மிகவும் ருசிகரமான முயற்சி இது. அது மட்டுமல்ல. எந்த விதமான நிர்வாக நிர்ப்பந்தமும் இல்லாமல், விவசாயிகளின் தன்னிச்சையான—இஷ்ட பூர்வமான—ஒத்துழைப்புடனும் ஆதரவுடனும், கூட்டுறவு பாணியை—போலந்தின் கிராமப் புறத்தை சோஷலிச மயமாக்குவதென்ற இறுதி இலட்சியத்தை—ஈடேற்றுவதற்கான முயற்சியே யாகும்இது.

# சீனவில் விவசாயிகளுக்கு தொழிலாளர் உதவி

ஷாங்காய், டிச. 16—

ஷாங்காய் நகரை அடுத்த கம்யூன்களைச் சேர்ந்த நூற்றுக் கணக்கான கிராமங்களில் விவசாயிகளுக்கு ஷாங்காய் நகரின் மின்சாரத் தொழிலாளர்களும் மின்சாரக் கருவிகள் உற்பத்தி செய்யும் தொழிலாளர்களும் உதவி புரிந்தார்கள்.

கிராமப்புறங்களில்வயல்களுக்கு நீர் இறைக்கும் பம்ப் செட்டுகளும் மெஷின்களும் எங்கெங்கெல்லாம் பழுதாகிக் கிடக்கிறதோ அவை யாவற்றையும் ஒரே நாளில் ரிப்பேர் செய்ய சென்ற மாதம் கடைசி ஞாயிற்றுக் கிழமையன்று ஷாங்காய் நகரில் 20 தொழிற்சாலைகளைச் சேர்ந்த 1000 தொழிலாளர்கள் நூற்றுக் கணக்கான கிராமங்களுக்கு மோட்டார் சைக்கிள்களில் சென்றனர். விவசாயிகள் அவர்களை ஆர்வமுடன் வரவேற்று விருந்துபச்சாரம் செய்தனர்.

பழுதுபட்டுக்கிடக்கும் இயந்திரங்களையெல்லாம் சரிசெய்யப்பட்டன. அது மட்டுமல்ல. பழுதாகிற காலத்தில், அவற்றை எப்படிச் சரிசெய்ய வேண்டுமென்பதையும் கிராமப்புற வாலிபர்களுக்கு நடைமுறையில் சொல்லிக்கொடுத்தார்கள்.

தொழிலாளர்கள் செய்த இப்பேருதவிக்கு நன்றி செலுத்தும் முறையில், விருந்துகளும் கிராமிய நடனங்களும் நடத்தி, தொழிலாளர்களுக்கு பழவகைகளும் பரிசளித்து மகிழ்ச்சியுடன் வழியனுப்பினர்கள்.

பீப்பிள்ஸ் கம்யூன்களைச் சேர்ந்த கிராமங்களில் இத்தனை நீரிறைப்புக் குழாய்களும் இயந்திரங்களும் பழுதுபட்டிருக்கின்றன என்ற புகார் கம்யூனிஸ்ட் கட்சிக்குக் கிடைத்தவுடன், கம்யூனிஸ்ட் கட்சி "ஒருநாள் உழைப்பு தானம்" கேட்டு தொழிலாளர்களுக்கு வேண்டுகோள்விட்டது. அதை அடுத்துதான் ஆயிரம் சைக்கிள் மோட்டார்கள்கிராமங்களை நோக்கிப் பறந்தன.

# நவ சீனவின் துரித முன்னேற்றத்திற்குக் காரணம்

## இந்திய தூதர் மனைவியின் விளக்கம்

### "கம்யூன்களால் குடும்பவாழ்க்கை அழிவுறவில்லை"

சென்னை, டிச. 17—

"சீன மக்கள் பழையனவற்றை அழித்துவிட்டுப் புதியனவற்றைச் சிருஷ்டிக்கவில்லை புதியன காண, அவர்கள் பழையனவற்றின் சிறந்தஅம்சம் தேவையே என்பதை நன்கு உணர்ந்துள்ளனர். எனவே அவர்களது இலக்கியம், நாடகம், சிற்பக்கலை, இசை, இதர துறைகளில் வாழ்க்கை எல்லாம் சீனவின் புராதன கலாச்சாரத்தையும் பாரம்பரியத்தையும் அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. மக்களின் வாழ்க்கைநிலை கணிசமான அளவு அபிவிருத்தி அடைந்திருக்கிறது. சீனவில் வேலையில்லாத் திண்டாட்டமே இல்லை" என்று சீனவில் இந்திய தூதரின் மனைவி திருமதி ஜி. பார்த்தசாரதி நேற்று மாலை சென்னை ரோட்டரி கிளப்பில் பேசுகையில் குறிப்பிட்டார்.

திருமதி பார்த்தசாரதி மேலும் கூறியதாவது: "கருமத்தில் கண், தாமதம் சிறிதுமின்றி செயலாற்றும் துடிப்பு, ஒற்றுமை, இணைந்து நடக்கும் பண்பு இவை சீனரிடம் பொருந்தியிருக்கின்றன. இக்குணங்கள் இருப்பதால் சீனர் திறமையுடன் நொடிப்பொழுதில் எதையும் சாதித்துவிடுகிருர்கள். இதனல் அவர்கள் மிகத்துரிதமாக முன்னேறுகிருர்கள்."

### கம்யூன்கள்

ரோட்டரி சங்கத்தினர் கேள்விகளுக்குப் பதிலளிக்கையில் திருமதி பார்த்தசாரதி அறிவித்ததாவது:

"சீனவில் கம்யூன்கள் குடும்பங்களைப் பிரித்துவிடவில்லை. குடும்ப வாழ்க்கை இருந்தே வருகிறது. அந்தக் கம்யூன்கள், ஒருவித கூட்டு ஸ்தாபனமும் கூட்டு உற்பத்தி திட்டமுமாகும். அந்தக் கம்யூன்களில் குடும்பங்களையோ குடும்ப வாழ்க்கையையோ நாசம் செய்துவிடவில்லை.

"தனி நபர்களைத் தனித்தனியாகப் பிரித்து வைப்பதுமில்லை. ஏராளமான கிராம மக்களுக்கு தனித்தனி விடுதிகளை அமைப்பது சர்க்காரால் ஆகக்கூடிய காரியமல்ல. ஆனல் நகரங்களால் சீன சர்க்கார் தொழிலாளருக்குத் தங்குமிடங்களாக ஹாஸ்டல்களை கட்டியிருக்கிறது.

### தொழிலாளியின் சராசரி சம்பளம்

"தொழிற்சாலைகளில் பணியாற்றும் தொழிலாளியின் சராசரி சம்பளம் ரூ. 160. கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினருக்கு நகரங்களிலும் கிராமப் பிரதேசங்களிலும் சிறிது கூடுதலான ஊதியம் பட்டுவாடா செய்யப்படுகிறது.

"இந்தியாவைப்போல் சீனவில் மதம் ஒரு முக்கிய சக்தியாக இருக்கவில்லை. இன்றுமில்லை; முன்புமில்லை. பௌத்தமதச் செல்வாக்கு சீனரிடம் இல்லை. வயதானர்களே பௌத்த மதத்தை ஆதரிப்பவர்கள்.

### தன்னம்பிக்கை உள்ள மக்கள்

"சீனர் தன்னம்பிக்கையுள்ளவர்கள். ஆகவே அவர்கள் கடந்த காலத்தில் அன்னியரை வரவேற்றதில்லை. இன்றுள்ள அரசியல் முறையின் கீழ், அந்த தன்னம்பிக்கை வலிமை பெற்றுள்ளது. இன்று சுயமரியாதையைச் சீனர் அதிகம் பேணுகிருர்கள்.

### பெண்களுக்கு சமத்துவம்

"மொழிசம்பந்தமாக சீனர் தங்கள் சொந்த லிபியோடு ரோமன் லிபியையும் கற்கிருர்கள். விஞ்ஞான நூல்கள் பல, சீனமொழியில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன. சீனவில் பெண்களுக்கு பூரண சமத்துவம் உண்டு" என்று முடித்தார்.

சீனவில் தங்கியிருந்து தாம் கண்டதை திருமதி பார்த்தசாரதி மேலே கண்டவாறு விவரித்தார்.

சீன கலாச்சாரம், நாகரிகம் இவற்றைச் சித்திரிக்கும் 100 சிறு திரைக்காட்சிகள் இப்பேச்சின் போது காட்டப்பட்டன.

ரோட்டரி சங்கத் தலைவர் திரு. ஏ. ஆர். நாராயணராவ், திருமதி பார்த்தசாரதியை வரவேற்ருர்.

# பீடித் தொழிற்சாலைகள் மாற்றப்படுவதை தடுக்க முடியாது

## பீடித் தொழில் பிரச்சினைபற்றி தொழிலதிபர்களுடன் பேச்சு நடக்கும்

சென்னை, டிச. 17—

பீடித் தொழிலாளர் சட்டத்தை மீறித் தொழிற்சாலைகளை வேறு ராஜ்யங்களுக்கு பீடி முதலாளிகள் மாற்றிச் செல்கிருர்கள். தொழிலாளர்களுக்கு வேலை இல்லை என்று நோட்டிஸ் கொடுத்திருக்கிருர்கள். இது சம்பந்தமாக கம்யூனிஸ்ட் எம். எல். ஏ. வி. கே. கோதண்டராமன் சட்டசபையில் கேள்வி கேட்டிருந்தார்.

முதலாளிகள் தொழிற்சாலைகளை வேறு ராஜ்யங்களுக்கு மாற்றிச் செல்வதைத் தடுக்க முடியாது என்று மந்திரி பக்தவத்சலம் கூறினர், சென்னை ராஜ்ய பீடித்தொழில் சட்டம் போலவே அண்டை ராஜ்யங்களிலும் கொண்டுவரப்படவேண்டும் என்று தொழிலமைச்சர்கள் மாநாட்டில் வற்புறுத்தப்பட்டிருப்பதாயும் அப்படிச் சட்டம் வந்தால் மாற்றங்கள் நடக்காது என்றும் அவர் தெரிவித்தார்.

பீடித் தொழில் சம்பந்தமான பிரச்சினைகளைப் பற்றிப் பேச லேபர் கமிஷனர் டிச. 23-ந் தேதி தொழிலதிபர்களுடன் விவாதம் நடத்த ஏற்பாடு செய்திருப்பதாயும் அவர் கூறினர்.

### இவ்வாரச் செய்திக் கதிரில்

# ஐசன்ஹோவர் விஜயக் காட்சிகள்

புதுடில்லி, டிச. 16—

ஜனதிபதி ஐசன்ஹோவர் இந்தியாவில் தங்கியிருக்கையில், அவர் சென்றவிடங்களில் அவருக்குக் கிடைத்த வரவேற்புக் காட்சிகளை சர்க்கார் திரைப்படப் பிரிவினர் தயாரித்துள்ள இவ்வாரச் செய்திக் கதிரில் காணலாம். இந்தச் செய்திக் கதிர், டிச. 18-ந் தேதி வெள்ளிக்கிழமையிலிருந்து இந்தியா வெங்கும் திரையிடப்படுகிறது.

இந்தச் செய்திக் கதிரில், அமெரிக்க ஜனதிபதி பார்லிமெண்ட் சபையிலும், உலக விவசாயச் சந்தையிலும் நிகழ்த்திய உரைகளின் ஒலிப்பதிவுகள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவர் தாஜ் மகாலுக்கு விஜயம் செய்வது, கிராமிய இந்தியாவின் தோற்றம், டில்லி ராம்லீலா மைதானத்தில் அவருக்கு வரவேற்பு அளிக்கப்படுவது ஆகிய காட்சிகளையும் காணலாம்.

# மத நம்பிக்கையுணர்வு குறித்து நேரு

புதுடில்லி, டிச. 17—

"மதநம்பிக்கையினர்கள் கோஷ்டியைச் சேர்ந்தவனல்ல நான்" எனப் பிரதமர் நேரு மீண்டும் இன்று அறிவித்துள்ளார்.

டில்லி பல்கலைக் கழகத்தில் காந்திபவனத்துக்கான அடிக்கல்லை அவர் நாட்டுவித்தார். "என்னுள்ளே சிறிது ஆத்மீக உணர்வு உள்ளது. ஆனல் மத நம்பிக்கையாளர்களை உருகச் செய்யும் அம்சங்களால் நான் ஆட்டிப்படைக்கப்படுவதில்லை. காந்தியடிகளின்பால் நான் பெரிதும் கவரப்பட்டேன். ஆனலும் மதச் சார்பு நிலையிலிருந்து நான் பேசவில்லை. இந்த நிலையிலிருந்து ஒவ்வொரு மதத்தைப் பற்றியும் பல தொழுகைப் பாடல்கள் பாடப்படுகின்றன. ஆனல் என் மனத்தில் ஆழப் பதிந்தது அவரிடம் இருந்த சிறந்த மானிட உணர்வும், அவர் மேற்கொண்ட செயல்களும்தான்" என நேரு கூறினர்.

# அகில இந்திய எழுத்தாளர் மகாநாடு

## இரண்டாம் நாள் நிகழ்ச்சி விவாதம் ஆரம்பம்

சென்னை, டிச. 17—

அகில இந்திய எழுத்தாளர் மகாநாட்டின், இரண்டாம் நாளான இன்று, நிகழ்ச்சிகள் காலை 8-30 மணிக்கு ஆரம்பமாயிற்று.

மகாநாட்டுக்கு வந்திருந்த பிரதிநிதிகள் மூன்று பிரிவாகயிருந்து மூன்று பொருள் பற்றி விவாதம் நடத்தினர்கள்.

ஒரு தொகுதிக்கு மா மா. வரேல்கர் தலைமை வகித்தார்.

இந்திய பாரம்பரியமும், இன்றைய எழுத்தாளரும் என்ற பொருள்பற்றி விவாதிக்கப்பட்ட பகுதிக்கு மாஸ்தி வெங்கடேச அய்யங்கார் தலைமை வகித்தார். விவாதத்தை ரகுநாத ஐயர் தொடங்கி வைத்தார்.

இந்திய மொழிகளின், இலக்கியங்களின் ஒற்றுமையின் முக்கிய அம்சங்கள் என்ற பொருள் பற்றி நடைபெற்ற விவாத பகுதிக்கு பேராசிரியர் கவுல் தலைமை வகித்தார்.

தேசத்தின் பல பகுதிகளிலுமிருந்து வந்த எழுத்தாளர்கள் இந்த விவாதத்தில் பங்கு பெற்றனர்.

சகோதரப் பிரதிநிதிகளாக வந்திருந்த அந்நிய நாட்டு எழுத்தாளர்களும் தங்கள் அபிப்பிராயங்களை வெளியிட்டனர். இன்றைய விவாதம், மத்திய உணவு நேரம் வரையில் நடைபெற்றது.

மாலை 4 மணிக்கு எழுத்தாளர்களுக்கு சந்தமாமா பதிப்பகத்தாரால் விஜயா கார்டனில் தேநீர் விருந்தொன்று வழங்கப்பட்டது. ஒரு நிகழ்ச்சியும் நடத்தப்பட்டது.

வந்திருந்த எழுத்தாளர்களை சந்தமாமா நிர்வாகத்தின் சார்பில் திரு. நாகிரெட்டி வரவேற்ருர்.

இரவு 6 மணிக்கு, அடையாறு கலாக்ஷேத்திர மாணவிகளால் 'சீதா சுயம்வரம்' என்ற நாட்டிய நிகழ்ச்சி நடத்தப்பட்டது.

# தோழர்களுக்கு கட்சிக் கார்டு வழங்கப்பட்டது

வேலூர், டிச. 17—

வேலூர் தாலூகா பள்ள இடையம்பட்டி கிராமத்தில் கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர்களுக்கு கட்சிக் கார்டு வழங்கப்பட்டது. வேலூர் தாலூகா கமிட்டி செயலாளர் தோழர் வி எஸ். ஸ்ரீராமன் கார்டு வழங்கினர். 7 பேர் கொண்ட கமிட்டி அமைக்கப்பட்டது. காரியதரிசியாகத் தோழர் எஸ். கண்ணனும் உதவிக் காரியதரிசியாகத்தோழர் முருகேசனும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

உணவுப் பொருட்களின் விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தக் கோரியும், படி அரிசி 12 அணுவுக்கு கொடுக்கவேண்டுமென்றும 10 ஏக்கருக்கு மேலுள்ளோரிடம் கட்டாயக் கொள்முதல் செய்ய வேண்டுமென்றும் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. (ந-கி.)

# இராக்குக்கு எதிரான வேலைகளில் இறங்கவேண்டாம்

## இரானுக்கு இராக் எச்சரிக்கை

பாக்தாத், டிச. 17—

இராக்குக்கு எதிராகக் கலகத்தைத் தூண்டும் கீழ்த்தரமான வேலைகளில் இரான் சர்க்கார் இறங்கிவருவதாக இராக் சர்க்கார் இன்று குற்றம் சாட்டியது. மேலும் இரான் மன்னர் ஷா கண்மூடித்தனமாக அரசியலில் இறங்க வேண்டாமென்றும் இராக் சர்க்கார் புத்திமதி கூறியது.

இராக் வெளிவிவகார மந்திரி இலாகா பிரதிநிதி ஒருவர் வெளியிட்டு பாக்தாத் ரேடியோ ஒலி பரப்பிய அறிக்கையில் மேற்கண்டவாறு கூறப்பட்டது இரானியப் பார்லிமெண்டில் இரானிய வெளிவிவகார அமைச்சர் செய்த பிரசங்கத்தை இராக் சர்க்கார் பிரதிநிதி விமர்சனம் செய்தார். இரானியப்பத்திரிகைகளும், ரேடியோவும் இராக்கைத் தாக்கிப் பிரசாரம் நடத்திவருவதை அவர் கண்டித்தார்.

மேலும் எல்லை உடன்பாடுகளையும், சர்வ தேச சட்டத்தையும் இரான் மீறிவருகிறது என்றும் இராக் பிரதிநிதி குற்றம் சாட்டினர்.

# அவலாஞ்சி அணைப்பகுதியில் விபத்து

எமரால்டுமுகாம், டிச. 16—

அவலாஞ்சி அணையின் மேலிருந்து 47 அடி ஆழமுள்ள மற்ருெரு பகுதியில் தவறி விழுந்த விஜயராகவன் என்ற மெக்கானிக்கல் பிரிவு தொழிலாளி பலத்த காயமடைந்துள்ளார். இந்த விபத்து 14-ம் தேதி பிற்பகலில் நடைபெற்றது.

அணையின் மேல் செம்புத் தகட்டில் போல்ட் முறுக்கும்போது ஸ்பானர் நழுவியதாலும் அவ்விடத்தில் அவசியமான சாரங்களும் கைப்பிடிகளும் இல்லாததாலும் தான் இவ்விபத்து நேரிட்டதெனத் தெரிகிறது.

# தூத்துக்குடி-ஆலங்குளம் உப-தேர்தல்கள்

சென்னை, டிச. 17—

தூத்துக்குடி உப-தேர்தலுக்கு நியமனப்பத்திரம் தாக்கல் செய்யக் கடைசித் தேதி டிச. 29. ஓட்டுப் பதிவு ஜனவரி 28.

ஆலங்குளம் உப-தேர்தலுக்கு நியமனப்பத்திரம் தாக்கல் செய்யக் கடைசித் தேதி ஜனவரி 8 தேர்தல் பிப்ரவரி 8 என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

# சர்க்கரை ஸ்டாக்குக்கு எக்சைஸ் வரி போட அவசரச் சட்டம்

புதுடில்லி, டிச. 17—

சர்க்கரை மில்களிடம் அக்டோபர் மாதத்தில் இருந்த சில குறிப்பிட்ட சர்க்கரை மூட்டை ஸ்டாக்குக்கு புதிதாக எக்சைஸ் வரி விதிப்பதென்று லோக சபையில் ஓர் அவசரச் சட்டம் நிறைவேற்றப்பட்டது.

# விளையாட்டே வினையாயிற்று

## மாணவன் சுடப்பட்டு மாண்ட பரிதாபம்

சண்டிகார், டிச. 17—

தனது பெற்றோர்களை விளையாட்டுக்குப் பயமுறுத்தி வேடிக்கை காட்ட வேண்டும் என்று எண்ணிய லக்ஷ்மணபுரி பல்கலைக் கழக மாணவன சுட்டுக் கொல்லப்பட்ட பரிதாபகரமான சம்பவம் இங்கு நிகழ்ந்துள்ளது.

லக்ஷ்மணபுரியிலிருந்து இங்கு சொந்த வீட்டுக்கு வந்த மாணவன் ஒரு திருடனைப் போல பெற்றோருக்குத் தெரியாமல் கள்ளவாட வீட்டுக்குள் நுழைய முயன்ருன். திருடன் என்று எண்ணிய பெற்றோர் உதவி உதவி என்று கூக்குரலிட்டனர்.

மேல் மாடியில் தங்கியிருந்த உறவினரான சப்-டிவிஷனல் அதிகாரி சத்தம் கேட்டு வந்து துப்பாக்கியால் சுட்டிருக்கிருர். ஒரு குண்டு மாணவர் தொண்டையில் தாக்கியதால் ஆஸ்பத்திரியில் அவன் மரணடைந்தான்.

# டைரக்டர் சுப்ரமண்யம் சர்வதேச பிலிம் கவுன்சில் ஆலோசகராக நியமனம்

புதுடில்லி, டிச. 17—

பிரபல திரைப்பட டைரக்டர் கே. சுப்ரமணியம் ஐ. நா. கல்வி சமூக கலாசார ஸ்தாபனத்தின் கீழுள்ள சர்வதேச பிலிம் டெலிவிஷன் கவுன்சிலுக்கு ஆலோசகராக நியமிக்கப்பட்டிருக்கிருர்.



குமரி பிலிம்ஸ் பட ஆரம்ப விழாவில், எஸ். வி. சகஸ்ரநாமம், நிமாய் கோஷ், தியாகராஜன் (கேமராவை முடுக்கி வைத்தவர்), டைரக்டர் சுப்ரமண்யம், எல். விஜயலக்ஷ்மி முதலியோர். சகஸ்ரநாமத்திற்குப் பின் தோழர் ஜீவா நிற்கிறார்.

# குமரி பிலிம்ஸ் படம் ஆரம்ப விழா!

## ஒளிப் பதிவுப் பிரிவின் தொழிலாளி கேமராவை முடுக்கினார்

### டைரக்டர் கே. சுப்ரமண்யம், ஜீவா வாழ்த்துரைகள்

பிரபல ஒளிப்பதிவாளர் திரு. நிமாய் கோஷ், இசையமைப்பாளர் திரு. எம். பி. சீனிவாசன், திரு. தாமோதரன் முதலியவர்கள் கூட்டாக 'குமரி பிலிம்ஸ்' என்ற படக் கம்பெனி யொன்றை ஆரம்பித்துள்ளனர். இவர்கள் தயாரிக்கப் போகும் படத்திற்கான ஆரம்ப விழா சென்ற திங்கட்கிழமை காலையில் பரணி ஸ்டூடியோவில் நடைபெற்றது.

இதுவரை பட உலகில் நிகழ்ந்திராத அதிசயமொன்று அன்று நடைபெற்றது. ஒளிப்பதிவுப் பிரிவில் பணியாற்றி வரும் தியாகராஜன் என்ற ஒரு சாதாரண தொழிலாளி கேமராவை முடுக்கி வைத்தார். இவர் சுமார் 30 வருட காலமாக அதாவது சினிமாத் தொழிலின் ஆரம்ப காலத்திலிருந்து இதே துறையில் பணிபுரிந்து வருகிறார் என்பது இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

**டைரக்டர் சுப்ரமண்யம்**

இவ்விழாவிற்கு சினிமா உலகின் தந்தைபோல விளங்கும் டைரக்டர் கே. சுப்ரமண்யம் தலைமை வகித்தார். "நான் நீண்டகாலமாகக் கண்டுகொண்டிருந்த கனவை இப் படக் கம்பெனியார் நனவாக்கிவிட்டனர். கூட்டுறவு முறையில் இவர்கள் சேர்ந்து படம் பிடிக்கும் இம்முறை ஒரு புரட்சிகரமானதே. எல்லாவற்றையும்விட, ஒரு சாதாரண தொழிலாளியைக்கொண்டு இப்படத்தை ஆரம்பித்தது ஒரு அரிய சாதனையாகும். இதை நானே செய்யவேண்டுமென்று எண்ணியிருந்தேன். ஆனால் எனக்கும் இவர்கள் முந்திக் கொண்டு விட்டார்கள்" என்றார்.

அவர் மேலும் பேசுகையில், "இத்தொழிலில் சுமார் 8½ கோடி ரூபாய் மூலதனம் போட்டும் 100-க்கு 95 பேர்களுக்கு இத்தொழிலில் நம்பிக்கையில்லாதிருக்கிறது. இதை மாற்ற இதில் சம்பந்தப்பட்ட அனைவரையும் கூட்டி ஒரு நல்ல முயற்சி எடுக்கவேண்டும் என்ற ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன" என்று குறிப்பிட்டார்.

**சகஸ்ரநாமம்**

அடுத்தபடியாக நடிகர் எஸ். வி. சகஸ்ரநாமம் பேசினார். "ஒரு படம் விரைவில் முடிய வேண்டுமென்றால் சம்பந்தப்பட்ட அனைவரும் காலாகாலத்தில் வந்து சேருவது மிகவும் முக்கியமாகும். 7 மணிக்கு படப் பிடிப்பு என்றால் 11 மணிக்கு வந்து, 12 மணிக்கு வேறொரு படப்பிடிப்புக்குச் செல்ல வேண்டுமென்று கூறும் 'நடிகர்'களும் இருக்கிறார்கள். நான் அவர்களைக் குறை கூறவில்லை. மற்றவர்களின் சங்கடங்களையும் உணர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஆனால் இந்தப் படத்தில் சம்பந்தப்பட்டவர்கள் கட்டுப்பாடு உள்ளவர்கள், [illegible] உள்ளவர்கள். இதில் நடிக்கும் நடிகர்களும் அப்படிப்பட்டவர்களே. ஆதலால் அந்தக் குறைகள் இதில் ஏற்பட வழி இல்லை" என்று அவர் கூறினார்.

**ஏ. எல். சீனிவாசன்**

பிரபல படத்தயாரிப்பாளரான ஏ. எல். சீனிவாசன் பேசுகையில், இப்படத்தை டைரக்ட் செய்பவரும், தயாரிப்பாளர்களில் ஒருவருமான நிமாய் கோஷின் உள்ளப் பண்பைப் பற்றி விவரித்தார். "ஒரு முறை என் படமொன்றில் பணி புரிவதற்காக நிமாய் கோஷை நியமித்தேன். அப்போது அவரிடம் சம்பளம் எவ்வளவு வேண்டுமென்று கேட்டேன். அதற்கவர், 'எனக்கு மாதம் 500 ரூபாய் தேவையிருக்கிறது, அது கிடைத்தால் போதும், 10 நாள் வேலை செய்தால் நாளொன்றுக்கு 50 ரூபாய் வீதம் 500 ரூபாய் கொடுங்கள். 20 நாள் வேலை செய்தாலும் அதே 500 ரூபாய் போதும், ஆனால் 5 நாட்கள் மட்டும் வேலை செய்தால் 250 ரூபாய் போதும், ஏனெனில் உழைக்காமல் ஊதியம்பெற மாட்டேன் என்று கூறிவிட்டார்.

இம்மாதிரி உழைப்புக்குத் தக்க, தேவைக்குத் தக்க ஊதியம் கேட்ட நபரை நான் இதுவரை பட உலகில் கண்டதுகிடையாது. இம்மாதிரியான பொறுமையுடைமை உள்ளம் படைத்த நிமாய்கோஷ் அவர்கள் ஈடுபடும் இந்த படம், சிறந்த வெற்றியாகத் திகழும் என்பதில் சந்தேகமில்லை" என்றுகூறினார்.

**ஜீவா**

அடுத்தபடியாக தோழர் ப. ஜீவானந்தம் பேசினார். "கை வருந்தி உழைப்பவர் தெய்வம்..." என்று பாரதியார் பாடினார். பேசாத படங்கள் தயாரான காலத்திலிருந்து பணியாற்றிவரும் தொழிலாளியான தியாகராஜன் அவர்கள் இப்படத்தை ஆரம்பித்துவைத்தபோது எனக்கு இந்த பாரதியார் பாடல் நினைவுக்கு வருகிறது. புதிய யுகத்தில் கலைக்கு எப்படி ஆரம்பிக்கவேண்டும் என்பதை இந்த ஆரம்பவிழா காட்டுகிறது.

**உழைப்புக்குத்தான் மதிப்பு**

புதிய யுகவாழ்க்கையின் அடிப்படையின் நேர் உழைப்புக்குத்தான் மதிப்பு என்பது. இந்தக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு இந்தப் படத் தயாரிப்பாளர்கள்; இதில் பங்கு கொண்டு உழைப்பவர்கள், இதில் நடிக்கும் நடிகர்கள் எல்லோரும். 'ரூபாய் எட்டரை கோடி மூலதனம் போட்டும் நூற்றுக்குத் தொண்ணூற்றைந்துபேர்களுக்கு இத்தொழிலில் நம்பிக்கையில்லாதிருக்கிறது' என்று டைரக்டர் சுப்ரமணியம் கூறினார். தற்போது வெளிவரும் படங்கள் பெரும் சரிவையாக தோல்வியுற்று வருவதும், அதனுடனேயே படம் மந்தமுமே அதற்குக் காரணம்.

"படங்கள் தோல்வியுறக் காரணமென்ன? புதுமை இல்லாததே. அரைத்த மாவையே அரைப்பதுபோல திரித்த கயிற்றையே திரிப்பதுபோல வந்த கதைகளையே மறுபடியும் மறுபடியும் படமாக்குகின்றனர், வேடங்களையும், பெயர்களையும் மட்டும் மாற்றிக்கொண்டு. மக்களின் லேசான சுவைகளைத் தட்டியெழுப்பி அவைகளின் மூலம் நிற்க முயற்சிக்கின்றனர். இந்த நிலை மாறவேண்டும்.

**திரும்புமுனை**

"தொழில் செழித்தால்தான் வாழ்வு செழிக்கும். இதை தயாரிப்பாளர்கள் உணரவேண்டும். ஆனால் இவர்கள் தயாரிக்கப் போகும் படம் புதிது, சுவை புதிது. குழந்தையின் அனுபவங்கள் மூலம் கலை படமாக்குகிறவர்கள் இப்படத்தை எடுக்கின்றனர். தன்னடக்கமுள்ள தோழர்கள் பெருக்க வசதி வந்ததும் தன்னடக்கத்தை அகராதியில்தான் காண முடியும். ஆனால் இந்தப் படத் தயாரிப்பாளர்களான என் தம்பிமார்களின் தன்னடக்கத்தைப் பற்றி எனக்குத் தெரியும். வைரம் பாய்ந்த அனுபவம், குடும்ப ரத்தம், சமுதாயத்துக்குப் பணி புரியும் எண்ணம் உள்ளவர்கள் இவர்கள். ஆகவே இவர்களது தயாரிப்பில் எனக்கு அதிக நம்பிக்கை உண்டு. படத்துறையில் இப்படம் ஒரு திரும்புமுனையாக அமையுமென்பதில் சந்தேகமில்லை, இப்படம் வெற்றிபெற இவர்கள் அனைவோர்களின் சார்பாக என் ஆசியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்" என்று முடித்தார்.

**வி. சீனிவாசன்**

அடுத்தபடியாக டைரக்டர் வி. சீனிவாசன் பேசினார். இறுதியில் நிமாய்கோஷ் அனைவருக்கும் நன்றி தெரிவித்தார். 'சினிமா பொழுதுபோக்கு மட்டுமின்றி வாழ்க்கைக்குப் பயன்படவேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம்' என்றார். ஆரம்பத்தில் அனைவோரையும் தாமோதரன் வரவேற்றார். எஸ். வி. சுப்பையா வாழ்த்து அனுப்பியிருந்தார்.



ஜெமினியின் 'இரும்புத் திரை'யில் பி. சரோஜா தேவி.

## குமரி பிலிம்ஸ் படம்

### நடிகர்கள்

புதுமுகம் ஒருவரை கதாநாயகனாக அறிமுகப்படுத்தப்போகும் இப்படத்தில் எல். விஜயலட்சுமி, எஸ். வி. சகஸ்ரநாமம், எஸ். வி. சுப்பையா, டி. கே. பாலச்சந்திரன், வீரப்பன், தட்சிணாமூர்த்தி, சாமுதனா, முத்தையா முதலியவர்கள் நடிக்கப்போகின்றனர். ஆர். கே. கண்ணன் இப் படத்திற்கான கதை வசனம் எழுதியுள்ளார். எம். பி. சீனிவாசன் இசையமைக்க, ஜெயகாந்தனும், கே. சி. எஸ். அருணாசலமும் பாடல்கள் அமைத்துள்ளனர். கலாசாகரம் ராஜகோபால் கலைப் பகுதியைக் கவனிக்கிறார். டைரக்ஷன் நிமாய்கோஷ்.

## நவாப் ராஜமாணிக்கம் கம்பெனியின் தசாவதாரம்

நாடகக் கலையரசு, நாடகக் கலாநிதி, நாடகக்கேசரி, சுதந்திர நாடகமணி, நாடகக் கலைக் காவலன் என அநேக பட்டங்கள் பெற்று, நாடகக் கலையைச் சிறப்புற நடத்திவரும் நவாப் டி. எஸ். ராஜமாணிக்கத்தின் மதுரை தேவி பால விநோத சங்கீத சபையாரின் தசாவதார நாடகம் சென்னை ஒற்றைவாடை தியேட்டரில் பலமாதங்களாகத் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. முன்னைய திருவிதாங்கூர் ராஜ்யத்தில் திவானாக இருந்து ராஜமாணிக்கம் கம்பெனிக்கு தமிழ் நாடகங்கள் நடத்த ஊக்கமும் வசதிகளும் அளித்த டாக்டர் சர்.சி.பி. ராமசாமி அய்யர் அவர்கள் 7-12-'59-ல் தசாவதார நாடகத்துக்கு தலைமை வகித்தார். நவாப் ராஜமாணிக்கத்தை அவர் பாராட்டிப் பேசினார்.

தசாவதாரக் காட்சிகள் பிரமாதமாக இருந்தன. கடல் அலைகளும், கடலுக்குள் யுத்தம் நடப்பதும் தத்ரூபமாக இருந்தன. இரணியனாக நடிக்கும் ராஜமாணிக்கம், புத்திர பாசத்தால் அலைமோதுவதும், அதே சமயத்தில் ஜென்ம சத்துருவான விஷ்ணுவின் நாமத்தை தன் புதல்வன் பிரகலாதன் துதிப்பது கண்டு பாய்புலிபோல் சீறுவதுமான உணர்ச்சி நடிப்பு நன்றாக இருந்தது.

இருநூறுக்கு மேற்பட்ட சிறுவர், சிறுமியர், இளைஞர்களை நடிகர்களாகக் கொண்டு, நடிப்பில் அவர்களைத் தேர்ச்சி பெற்றவர்களாகப் பயிற்றுவித்து, கலைப் பணிபுரியும் நவாப் அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும் என்றார்.

## வளம்பெற்ற வாழ்வு

குலதெய்வம் ராஜகோபால் நாடகமாக நடத்திவந்த 'வளம் பெற்ற வாழ்'வை பி. ராஜமாணிக்கம் செட்டியார் திரைப்படமாக்கப் போகிறார். அவரது பிரம்மாண்டமான தயாரிப்பான 'ராஜ பக்தி'யை வெளியிட்டவுடன் இப்படப் பிடிப்பின் வேலைகள் ஆரம்பமாகுமெனத் தெரிகிறது.

இதற்கான திரைக்கதை வசனத்தை கவிஞர் சுப்பு ஆறுமுகம் அமைத்து வருகிறார். குலதெய்வம் ராஜகோபாலும், சாரங்கபாணியும் இதில் நடிப்பார்கள். மற்ற நடிகர்களில் பெரும்பாலோர் புது முகங்களாக இருப்பார்கள் இப்படத்தை கே. சுப்பு டைரக்ட் செய்வார்.

## குலதெய்வம் ராஜகோபால் ரூ. 10 ஆயிரம் நன்கொடை

நகைச்சுவை நடிகர் குலதெய்வம் ராஜகோபால் கும்பகோணம் மின்சாரத் தொழிலாளர் சங்கக் கட்டிட நிதிக்காக ரூ. 10 ஆயிரம் நன்கொடை அளித்தார்.

'வளம்பெற்ற வாழ்வு' என்ற நாடகத்தை கும்பகோணத்தில் நடத்தி, அதில் வசூலான ரூ. 10 ஆயிரத்தையும் அதோடு ரூ. 501ம் சேர்த்து அவர் மேற்படி சங்க நிதிக்காகக் கொடுத்தார்.

# திரை உலகம்

படவிமர்சனம்

## பொன்னு விளையும் பூமி

**தயாரிப்பு : ஓரியண்டல் மூவீஸ்—டைரக்ஷன் : ஏ. பீம்சிங்.**

உழைப்பில் நம்பிக்கை கொண்ட ஒரு கிராமக் குடும்பம், சூழ்ச்சியால் பணம் பறிக்கும் சில பட்டணத்து ஆசாமிகள், இவர்களிருவர் மத்தியில் சொக்கட்டான் காய்போல ஒரு பெண். அவளோடு இன்னொரு பெண்ணும் பங்குபெறும்போது சிக்கல் அதிகமாகி, விடுபடும் சம்பவத்தை சுவாரஸ்யமிக்கதாகச் செய்திருக்கின்றனர்.

உழைப்பாளியின் பாகம் ஜெமினி கணேசனுக்குப் புதிதல்லவென்றாலும், இப்படத்தில் ஏற்றுக்கொண்ட பாத்திரம் அவருக்குப்புதிதே. தந்தையின் பிணம் மயானத்துக்கு எடுத்துச் செல்லப்படும்போது, எதிரிகளிடமிருந்து தப்ப எண்ணி அப்பிணத்தை தானே சுமக்க, முன்னால் தீச்சட்டி ஏந்திச் சென்ற தன் மகன் மூலம் விவரமறிந்து உள்ளம் குமுறும் காட்சியும், வேறொரு பெண்ணின் வலையில் சிக்கிவிட்டார் என்று கண்கலங்கும் தன் சொந்த மனைவியிடம் உள்ள நிலையை எடுத்துச் சொல்ல முடியாமல் தவிக்கும் காட்சியும் சிறப்புடன் அமைந்திருக்கிறது.

துன்பத் துயரங்களை அனுபவிக்காத கதாநாயகியும் ஒரு கதாநாயகியா? பத்மினியின் பாகம் அதற்கு விதிவிலக்காக எப்படி அமையமுடியும்? பழக்கமான பாத்திரம், பழக்கமான நடிப்பு.

நடிப்பால் உள்ளத்தை உலுக்கும் நடிகர் ஒருவர் உண்டென்றால், அவர் எஸ். வி. சுப்பையாவாகத்தானே இருக்கமுடியும். பாத்திரப் படைப்பின் முழுத் தன்மையையும் அணுவளவுகூடப் பிசகாமல் செய்து முடித்திருக்கிறார்.

அவ்வளவு பெரிய உடலைக் குலுக்கி, நம் உடலையும் குலுங்க வைப்பவர் பாலையா. அவருக்குச் சற்றும் இளைக்காமல் தன் சக்தியையும் பிரயோகித்து அவருக்குத் துணை நிற்கிறார் சந்திரபாபு. அவரது பைத்தியக்கார ஆஸ்பத்திரி நகைச்சுவை ஓரளவு சிரிக்க வைத்தாலும், அதன் தன்மை ஏற்றுக்கொள்ளத் தக்கதல்ல.

ராகினிக்கு உள்ளம் வருத்தும் பாகமாக இல்லாவிட்டாலும் உடல் வருத்தும் பாகமாக அமைந்துள்ளது.

புதிதாக அறிமுகமாகும் வில்லன் நடிகர் சத்யபால் பிரமாதம், தன் உடல் தோற்றத்தால்!

டைரக்டரின் கவனக்குறைவு என்று சொல்லத்தக்க காட்சிகள் சில. தவிர்க்க முயன்றிருக்கலாம்.

படத்தின் முற்பகுதியைவிட பிற்பகுதி அதிவேகமடைந்திருக்கிறது. வசனமும் சீராக அமைந்துள்ளது.

வருகிற படங்களெல்லாம் வந்த படங்களை நினைவுபடுத்துகின்றன என்ற குறையை இதுவும் நிவர்த்திக்கவில்லை.



## டைரக்டர் எம். வி. ராமனுக்குப் பாராட்டு

பிரபல படத்தயாரிப்பாளரும், டைரக்டருமான எம். வி. ராமனை அமெரிக்க யாத்ரீகர்கள் பாராட்டினார்கள்.

பரங்கிமலைக் கருகிலுள்ள நந்தம் பாக்கத்தில் அவர் தயாரிக்கும் 'கொஞ்சும் சலங்கை' என்ற படத்திற்காக 110 அடி உயரத்தில் ஐயனாரப்பன் சிலையொன்று நிர்மாணித்திருப்பது அனைவருக்கும் தெரிந்ததே. காஞ்சிவரத்திற்குச் சென்று கொண்டிருந்த சில அமெரிக்க யாத்ரீகர்கள் வழியில் இந்தச் சிலையைப் பார்த்துப் பிரமித்தார்கள். அது பற்றிய விபரங்களை அவரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டதுடன் இந்தியாவின் செசில் பி. டெமிலி என்று பாராட்டி விட்டுச் சென்றார்கள்.

## நியூடோனில் ராட்சத மின்சக்தி இயந்திரம்

ராமன் புரொடக்ஷன்ஸாரின் 'கொஞ்சும் சலங்கை'க்காக நியூடோன் ஸ்டுடியோவில் சுமார் 8 ஆயிரம் ரூபாய் செலவில் பிரம்மாண்டமான அரங்கமொன்று நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது. ஜெமினி கணேசன் நாதஸ்வரம் வாசிக்க, சாவித்திரி பாட, கமலாலக்ஷ்மண் நாட்டியமொன்று சமீபத்தில் இந்த செட்டில் படமாக்கப்படவிருக்கிறது.

ஆனால் அக்காட்சி படமாக்கப்பட போதிய மின்ஒளி இங்கு எங்குமே கிடையாது. அதை எண்ணி சோர்வுற்றிருந்த படத்தயாரிப்பாளருக்கு, எங்கிருந்தோ ஒரு பெரிய ராட்சத ஜெனரேட்டரை (மின்சக்தி இயந்திரம்) கொண்டு வந்து ஆறுதலளித்தார்கள் தேவி பிலிம்ஸார். இந்த இயந்திரம் சுமார் ஒரு லட்சம் ரூபாய் பெறுமானமுள்ளதாம். அதுமட்டுமின்றி இந்தியாவிலேயே இம்மாதிரியான இயந்திரம் இல்லையென்று கூறப்படுகிறது. இந்த இயந்திரம் நியூடோன் ஸ்டுடியோவில் பொருத்தப்பட்டிருக்கிறது.



கலா பிலிம்ஸாரின் 'அண்ணா என் தெய்வ'த்தில் —ஒரு காட்சி.



நியூக்ளோப் தியேட்டரில் நடைபெற்ற 'கல்லூரி ஹெர்குலீஸ்' பரிசளிப்பு விழாவில் நியூக்ளோப் தியேட்டர் மானேஜர் ராஜன், பி. பி. ஐ. வைத்தியநாதன், 'கல்லூரி ஹெர்குலீ'ஸாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பெஞ்சி சென்.

## 'கல்லூரி ஹெர்குலீஸ்'

சென்னை நகரில் ஒரு பரபரப்பை ஏற்படுத்தி, மிகவும் பிரமாதமானமுறையில் வெற்றி கண்ட 'ஹெர்குலீஸ்' படத்தின் பதினொன்றாவது வாரத் துவக்கத் தினமான சென்ற வெள்ளிக் கிழமையன்று, நியூ க்ளோப் தியேட்டரில் புதுமையான பரிசளிப்பு விழா ஒன்று நடைபெற்றது. அவ்விழாவில் 'ஹெர்குலீஸ்' போன்ற உடலழகுள்ள கல்லூரி மாணவருக்கு வெள்ளிக்கோப்பையொன்றைப் பரிசளித்தார்கள்.

இதற்காக நவம்பர் 29ந் தேதியன்று ஸ்டான்லி வைத்தியக் கல்லூரியில் நடைபெற்ற தேர்வில், பெஞ்சி சென் என்பவர் 'கல்லூரி ஹெர்குலீஸா'கவும், எரிக்டேனியல் சீபெர்ட் 'இவ்வருட கல்லூரி மாணவ உடலழகனாகவும்' கே. ஸி. ரங்கசாமி இரண்டாவது பரிசுக்குரிய உடலழகனாக தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

சென்னை உள்நாட்டு இலா[...] காரியதரிசி திரு. பி. பி. ஐ. வை[...]தியநாதன் விழாவுக்குத் தலை[...] வகித்து, 'கல்லூரி ஹெர்குலீ[...]' பெஞ்சி சென்னுக்கு வெள்ளி[...] கோப்பையை பரிசளித்தா[...] ஸ்டான்லி வைத்தியக் கல்லூ[...] உடற்பயிற்சி டைரக்டரு[...] சென்னை ராஜ்யக் கல்லூரிக[...] வெயிட்லிப்டிங் அசோஸியேஷ[...] தலைவருமான திரு. கே. ஸ்ரீனி[...]சன் வரவேற்புரை நிகழ்த்தின[...].

பெஞ்சி சென் சென்னை பெ[...]கல் காலேஜ் மாணவர். எ[...] டேனியல்சீபெர்ட் எம்.ஐ.டி.யி[...] மாணவர். கே. ஸி. ரங்கசா[...] நியூ காலேஜ் மாணவர் மூவ[...]கும் வயது இருபதே என்ப[...] குறிப்பிடத்தக்கதாகும்.

## சம்பு பிலிம்ஸாரின் பாட்டாளியின் வெற்றி

விவசாயிகளின் அன்பு உள்ளம், பரிவு உணர்ச்சி, பாவ புண்ணியம் பற்றிய எண்ணங்கள் முதலியவைகளைத் தனக்கு சாதகமாக்கி நிலப்பிரபுக்கள் ஏமாற்றி வாழ நினைப்பதையும், உண்மைக்குக் கிடைக்கும் வெற்றி, நயவஞ்சகன் அடையும் நாசம் முதலியவைகளையும் மையமாகக்கொண்டு 'பாட்டாளியின் வெற்றி'யை உருவாக்கிவருகிறார் ஸ்ரீ சௌத்ரி.

கிராமீய சூழ்நிலைகள், கிராம மக்களின் பண்பாடுகள், பழக்க வழக்கங்கள் எல்லாம் பிரமாதமான முறையில் சித்தரிக்கப்பட்டிருக்கின்றனவாம்.

சாவித்திரியும், நாகேஸ்வரராவும் பிரதம பாகங்களில் நடித்துவருகின்றனர். கிராமத்தைச் சீர்திருத்தவரும் நாகரிக கலாசாலை யுவனாக தங்கவேலுவும், சுரண்டிப் பிழைக்கும் நிலப்பிரபுவாக டி. எஸ். பாலையாவும், மற்றும் கிரிஜா, கே. ஆர். செல்லம், சாரங்கபாணி, ரெங்காராவ் சம்பந்தம் ஆகியோரும் திறம்பட நடித்துவருகின்றனராம்.

இந்தப் படத்தின் வசனங்களை எளிமையும், இனிமையும் ததும்ப ராவே எழுதியிருக்கிறார். உடுமலை நாராயணகவியின் பாடலும் இதில் இடம் பெற்றிருக்கிறது. சாவித்திரியும் நாகேஸ்வரராவும் ஈடுபடும் மாட்டு வண்டிப் போட்டியொன்று ரசிகர்களின் மனதைக் கவரும் விதத்தில் அமைந்திருக்கிறதாம். ஏ. சுப்பாராவ் இந்தப் படத்தை டைரக்ட் செய்து வருகிறார்.

**வீர சிதம்பரனார்**

சென்ற ஒன்றரையாண்டு கா[...]மாக நடிகர் டி. கே. ஷண்மு[...] அவர்களின் உடல்நலக் குறை[...]வின் காரணமாய் நாடகங்[...] நடைபெறுமலிருந்த[...] அனைவருக்கும் தெரிந்த[...] இம்மாதம் 20-ந் தேதி மு[...] மீண்டும் நாடகங்கள் நடிக்[...] போவதாக டி. கே. எஸ். நா[...] மன்றம் அறிவித்துள்ள[...] ஔவையார், எது வாழ்[...] இராஜ ராஜ சோழன் நாட[...]கள் தொடர்ந்து நடைபெ[...] என்று தெரிகிறது.

அத்துடன் டி. கே. எ[...] சகோதரர்கள். கப்பல் ஓட்[...] தமிழன் தேசபக்தர் வ. உ. சி[...]பரம் பிள்ளையின் வீர வரல[...] பற்றிய நாடகமொன்றை[...] விரைவில் அரங்கேற்றவிருக்கி[...]றனர் என்று தெரிகிறது.

**அதிகாரி**

சில மாதங்களாக 'சித்ரா [...]ஸாரின் 'அதிகாரி' படப் பிடி[...] நிறுத்தி வைக்கப்பட்டிருந்த[...] இப்போது மறுபடியும் அப்பட[...]தின் வேலைகள் ஆரம்பமாகியி[...]கின்றன. எஸ். எஸ். ராஜே[...]திரன், ஈ. வி. சரோஜா, [...] சாரங்கபாணி, எம். என். ரா[...] மூஸ்தபா, குலதெய்வம் ரா[...]கோபால், பாலாஜி, டி. [...] ராமச்சந்திரன், விஜயகுமாரி [...]லியவர்கள் நடித்துள்ள [...] படத்தை எம். மஸ்தான் டைர[...] செய்கிறார்.



# தொழிற்சங்கத் தலைவர்கள் அமைச்சர்களைச் சந்தித்தனர்

## அமெரிக்க ரகத் துணி விலையைக் குறைத்த ஏற்றுமதியாளர்களின் போக்கை மாற்றக் கோரினர்

சென்னை, டிச. 19—

நேற்றைய தினம் (18-12-59) பிற்பகல் தோழர்கள் கல்யாண சுந்திரம் எம். எல். ஏ., வி. கே. கோதண்டராமன் எம். எல். ஏ., எஸ். கிருஷ்ணமூர்த்தி, கே.எஸ். பார்த்தசாரதி, டி. ஆர். கணேசன் முதலியவர்கள் அமைச்சர் பக்தவத்சலம் அவர்களை சந்தித்து கெஜம்துணி விலை 2·75க்குவாங்க ஒப்புக்கொண்ட ஏற்றுமதி வியாபாரிகள், இரண்டு நாளில் ஒப்பந்தத்தை மீறிவிட்டதை சுட்டிக்காட்டியும், கைத்தறி ஜவுளி ஏற்றுமதி அமைப்புக் குழுவின் மூலம் ஏற்றுமதி செய்யவேண்டுமென்று உற்பத்தியாகிவிட்ட ஜவுளியை விற்க வழி செய்ய வேண்டுமென்றும் பல கோரிக்கை அமைச்சரிடம் வலியுறுத்தினார்கள். அதையொட்டி இன்று ஒரு மணிக்கு மீண்டும் அமைச்சரைச் சந்தித்தனர். எக்ஸ்போர்டு ஆர்கனைசேஷன் ஜெனரல்மானேஜர் திரு சபாநாயகம், அவர்களும் பேச்சுவார்த்தைகளில் கலந்து கொண்டார். பேச்சுவார்த்தை தொடர்ந்து நடக்கிறது. அமைச்சர் பக்தவத்சலம் அவர்கள் யோசனைப்படி அமைச்சர் திரு. வி. ராமய்யா அவர்களையும் சந்தித்துப் பேசினார்கள்.

எக்ஸ்போர்டு ஆர்கனைசேஷனிலும் தொடர்ந்து 2-75-க்கு (கெஜம் துணி) வாங்க வேண்டுமென்றும், மற்ற கோரிக்கைகளும் வலியுறுத்தப்பட்டன.

சம்பந்தப்பட்டவர்களை நாளை கலந்து பேசி தகுந்த நடவடிக்கை எடுப்பதாக அமைச்சர் திரு. ராமய்யா அவர்கள் வாக்களித்தார்.

கே. எம். கண்ணபிரான், எம். ஆறுமுகம், எம். பாலய்யா, சம்பந்தம், ரங்கநாதன், கா. மு. கணேசன், இ. கோ. பொன்னுசாமி, நாராயணசாமி (புதுவை எம். எல். ஏ.), பி. ஷண்முகம் புதுவை, ஏகாம்பரம், புதுப்பேட்டை ராஜவேல், சுப்பராயலு சைதை முதலியவர்கள் இந்த பேச்சுவார்த்தையில் கலந்து கொண்டனர்.

## ஐஸன்ஹோவரின் நன்றியறிவிப்பு

புதுடில்லி, டிச. 16—

அமெரிக்க அதிபர் ஐசன்ஹோவர் அவருடைய விமானத்திலிருந்து அனுப்பிய பின்வரும் வாழ்த்துச் செய்தி பிரதம மந்திரிக்குக் கிடைத்திருக்கிறது.

அன்புள்ள பிரதம மந்திரி அவர்களே!

தங்கள் மீதும் தங்கள் நாட்டு மக்கள் மீதும் எனக்கிருக்கிற உண்மையான மதிப்பையும், எனக்கு மனமுவந்து அளிக்கப்பட்ட மறக்கமுடியாத வரவேற்புக்காக என்னுடைய நன்றியையும் ஓரளவுக்கு உங்களுக்குத் தெரிவித்துவிட்டேன் என்று, என்னுடைய விமானம் உங்கள் நாட்டைவிட்டுப் பிரிந்துகொண்டிருக்கிறபோது, நான் நம்புகிறேன். தங்களுடன் கருத்துக்களை பரிமாறிக் கொள்வதில் ஏற்படுகிற உற்சாகத்தை நான் பெரிதும் மதிக்கிறேன். என்பது தங்களுக்குத் தெரியும் என்று நான் நினைக்கிறேன். தாங்கள், இந்தியாவிக்குமட்டுமல்ல, உலகத்துக்கே நன்மை தரக்கூடிய பெரும்பணியில் ஈடுபட்டிருக்கிறீர்கள். நீங்கள் உங்களுடைய முயற்சியில் வெற்றியடைய வேண்டுமென்று நான் விரும்புகிறேன்.

தங்களுக்கும், திருமதி காந்திக்கும் நான் தனிப்பட்ட முறையில் நன்றி தெரிவித்துக் கொள்வதோடு தங்கள் மீதுள்ள அன்பையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

டிவைட். டி. ஐசன்ஹோவர்.

# சம்பளக் கமிஷன் சிபாரிசுகளால் பெரும் அதிருப்தி ஏற்பட்டுள்ளது

## ஊழியர்களுடன் அரசாங்கம் பேச்சு நடத்த வேண்டும்

### மக்கள் சபையில் எதிர்க்கட்சியினர் வற்புறுத்தல்

புதுடில்லி, டிச. 17—

**மத்திய சர்க்காரின் 20 லட்சம் ஊழியர்களிடையும் பொதுப்படையில் தொழிலாளரிடையும் சம்பளக் கமிஷன் சிபாரிசுகளால், பெரும் ஏமாற்றமும் அதிருப்தியும் விளைந்துள்ளனவென்று இன்று மக்கள் சபையில் வற்புறுத்தப் பட்டது.**

இன்று மக்கள்சபையில் 2வது சம்பளக் கமிஷன் சிபாரிசுகள் பேரில் விவாதம் துவங்கியது. விசிட்டர் காலரிகளில் ஏராளமான மத்ய சர்க்கார் ஊழியர்கள் அமர்ந்திருந்து விவாதத்தைக் கவனித்தனர்.

**சர்க்கார் போக்கு என்ன?**

கம்யூனிஸ்ட் உறுப்பினர் டி. சி. என் மேனன் உள்பட மூன்று உறுப்பினர்கள் இன்று பேசினர், அவர்கள் அக்கமிஷனின் முக்கிய சிபாரிசுகளை வன்மையாக ஆட்சேபித்ததோடு, தனது ஊழியர்களிடம் அரசாங்கமானது இவ்விதம் அனுதாபமற்றமுறையில் நடந்துகொள்வதையும் கண்டித்தனர்.

**நிதிமந்திரிக்கு அக்கறை இல்லை**

பி. சோ. உறுப்பினர் திரு. நாத்பாய் மிக வன்மையாக அரசாங்கத்தைக் கண்டித்தார். நிதி மந்திரி இந்த விவாதத்தைத் துவக்காததும் இந்த விவாதத்திற்குப் போதிய நேரம் ஒதுக்கப்படாததுமே அரசாங்கமானது தனது ஊழியர்களது பிரச்சினைகளில் அக்கறை கொள்ளவில்லை என்பதற்குச் சான்று என்றார் நாத்பாய்.

**கூடுதல் ஊதியமின்றி கூடுதல் வேலையா?**

நாத்பாய் பின்வருமாறு கூறியபோது எதிர்க் கட்சியினர் பலத்த கரகோஷம் செய்தனர்:—

2,017,000 ஊழியர்கள் ஒரு வருஷத்தில் 31 நாட்கள் கூடுதலாக, கூடுதல் ஊதியமின்றி உழைப்பார்களென்று அரசாங்கம் திட்டமிட்டிருந்ததா? இந்தப் பிரச்சினையை அரசாங்கம் அணுகும் முறையே தவறானது. திருப்தியுடனும் விஸ்வாசத்துடனும் திறமையுடனும் சர்க்கார் ஊழியர்கள் பணியாற்றுவதின் முக்கியத்தை அரசாங்கம் உணரவில்லை. சம்பளத்தை கூடுதலாக்குவதால் செலவு அதிகரிக்குமென்பதே அரசாங்கத்திற்கு முக்கியமாகி விட்டது.

**விலைவாசி ஏற்றத்திற்கு நிவாரணமுமில்லை**

கேரள கம்யூனிஸ்ட் உறுப்பினர் தோழர் டி. சி. என். மேனன் விவாதத்தைத் துவக்கினார். அவர் பேசுகையில் "20 லட்சம் சர்க்கார் ஊழியரிடையும் பொதுப்படையில் தொழிலாளரிடையும் பெரும் ஏமாற்றம் ஏற்பட்டிருக்கிறது. சம்பளக் கமிஷன் சிபாரிசுகளினால் கண்ட பலன் இதுவே.

"சர்க்கார் ஊழியருக்கு அடிப்படை குறைந்தபட்ச சம்பளம் மறுக்கப்படுவதுடன், விலைவாசி ஏற்றத்திற்கு நிவாரணமும்அளிக்கப்படவில்லை.

"அரசாங்கம் தனது ஊழியர் சங்கங்களுடன் பேச்சுவார்த்தை நடத்தி, குறைகளையும் அநீதியையும் நீக்க ஆவன செய்யவேண்டும்.

"சம்பள நிர்ணயத்திலோ அல்லது தொழிலாளர் விவகாரங்களிலோ அனுபவமில்லாதவர்களை சம்பளக் கமிஷனில் உறுப்பினர்களாக நியமித்துவிட்டது பெரும் குறைபாடு" என்று தோழர் மேனன் குறிப்பிட்டார்.

**அரசாங்கத்தின் நம்பிக்கைத் துரோகம்**

தோழர் மேனன் மேலும் பேசியதாவது:

தொழிற்சாலைகளில் வேலை செய்வோர் விஷயமாக 15-வது இந்திய தொழில் மகாநாடு அங்கீகரித்த அடிப்படை சம்பள விகிதம் அரசாங்கத்தைக் கட்டுப்படுத்தாதென்று அக்கமிஷனுக்கு அரசாங்கம் எழுதியதானது நம்பிக்கைத்துரோகமாகும். நாட்டில் சாதாரண மனிதரின் வாழ்க்கை நிலையை சம்பளக் கமிஷன் கவனிக்கவில்லை. சர்க்காரின் நிதி கஷ்டத்தையே பிரதானமாக அக்கமிஷன் கருதி, சிபாரிசுகளைச் சமர்ப்பித்திருக்கிறது.

**உள்ளதும் போயிற்று**

குறைந்தபட்ச சம்பள விஷயமாக முதல் சம்பளக் கமிஷன் நிர்ணயித்த கொள்கைகளை இந்த இரண்டாவது கமிஷன் நிராகரித்துவிட்டது. இதனால் உள்ளதும் போயிற்று. இவ்வித சிபாரிசு இதர துறைகளில் சம்பள நிர்ணயத்தையும் பாதிக்கும். 2வது திட்டத்தால் ஏற்பட்ட தொழில்துறை அமைதியும் பங்கப்படும்.

முதல் கமிஷன் கவனித்தது போல் பஞ்சப்படி பிரச்சினையை இந்தக் கமிஷன் சீர்படுத்தவே இல்லை.

கட்டாய பிராவிடண்ட் நிதி வசூல், யதார்த்த நிலைக்கு ஒத்ததே அல்ல. இதனால் அநேக அரசாங்க ஊழியர்கள் பிரதிகூலமே அடைவர்.

முதல் பிரிவு அதிகாரிகள் விஷயத்தில் அனுசரித்த முறையை இந்தக் கமிஷன் அடித்தள உத்தியோகஸ்தர்கள் விஷயத்தில் அனுசரிக்காமல் பாரபட்சம் காட்டியுள்ளது. நாலாவது பிரிவு ஊழியரைப் பற்றி கூறுகையில் கமிஷன் விலையேற்றப் பிரச்சினை இவர்களைப் பொறுத்தவரையில் ஏற்படாதென்று கூறுகிறது. முதல் பிரிவு அதிகாரிகளின் அடிப்படை சம்பளம் ரூ. 100 கூடுதலாக்கப்பட்டிருக்கிறது.

மத்திய சர்க்கார் ஊழியர் சங்கங்களின் கூட்டு சம்மேளனத்தின் தலைவரும் பி சோ. உறுப்பினருமான திரு. நாத்பாய் பேசுகையில், ஏற்கனவே இருந்த சில அனுகூலங்களையும் 2வது சம்பளக் கமிஷன் ரத்துசெய்துவிட்டதென்றார். குறைந்தபட்ச சம்பளம் சம்பந்தமான சிபாரிசுகள் முற்றிலும் குறைபாடுள்ளவை என்றார்.

அடுத்தபடியாக திரு. அரவிந்த கோஷால் (பார்வர்டு பிளாக்) பேசினார். ஏற்கப்பட்ட இரு கொள்கைகளிலிருந்து சம்பளக் கமிஷன் பிறழ்ந்துவிட்டதாகவும் அது சம்பந்தமாக ஒரு தொழிற்சங்கவாதியைக் கமிஷனில் நியமிக்காததையும் நியாய ஊதியக் கமிட்டி வரையறுத்த கொள்கைகளையும் கமிஷன் அனுசரிக்கவில்லை யென்பதையும் குறிப்பிட்டார்.

சர்க்கார் ஊழியர் சங்கங்களுடன் பேச்சுவார்த்தை நடத்தும்படி இன்று பேசிய மூன்று எம்.பி.க்களும் வற்புறுத்தினர்.

# கேரளத்தில் நேர்மையான தேர்தல் நடத்த கவனம் செலுத்தப்படுமா?

## மக்கள் சபையில் கேள்வி

புதுடெல்லி, டிச. 17—

கேரளத்தில் சட்டமும் ஒழுங்கும் சீர்பட்டு சகஜ நிலை எய்திருப்பதாக மத்திய உள்நாட்டு மந்திரி பண்டித பந்த் மக்கள் சபையில் இன்று கூறினார். கேரளத்தில் இடைத்தேர்தல் நியாயமாகவும் நேர்மையாகவும் நடைபெற ஏதாவது பிரத்தியேக நடவடிக்கை எடுக்க அரசாங்கம் உத்தேசித்துள்ளதா என்று தோழர் விட்டல் ராவ் கேட்டார்.

பண்டித பந்த் தங்களால் முடிந்த எல்லாவிதமான நடவடிக்கைகளையும் அரசாங்கம் எடுத்து கொண்டு வருகிறது. மேலும் எல்லாக் கட்சிகளின் ஒத்துழைப்பையும் பொறுத்திருக்கிறது.

ஆரம்பத்தில் பண்டித பந்த் கூறியதாவது, கேரள கவர்னர் அரசியல் கட்சிகளின் தலைவர்கள் கொண்ட மகாநாடு ஒன்றை சென்ற செப்டம்பர் 3ம் தேதி கூட்டினார். சட்ட ஒழுங்கு நிலைமை குறித்து ஆலோசனை நடத்துவதே மகாநாட்டின் நோக்கமாகயிருந்தது. ஆனால் அக்கூட்டத்தில் முடிவொன்றும் எடுக்கப்படவில்லை என்று கூறினார்.

சட்ட ஒழுங்கை நிலைநிறுத்த எல்லாக் கட்சிகளின் சார்பில் வேண்டுகோள் விடவேண்டுமென்று அம்மகாநாட்டில் அரசாங்கம் ஏதாவது ஆலோசனை வைத்ததா என்று தோழர் பி. டி. புன்னூஸ் கேட்டார்.

பண்டித பந்த்: அம்மாதிரியான வேண்டுகோள் விடப்படவில்லை.

தோழர் கொடியன்: மத்திய திருவிதாங்கூர் பகுதியில், கலவரத்திற்கு கேந்திரமாக விளங்கிய இடங்களிலிருந்து நிர்ப்பந்தமாக தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வெளியேற்றப்பட்ட அரிஜன மக்கள், போலீஸ் பாதுகாப்பு கிடைக்காததால் இன்னமும் தங்கள் வீடு திரும்பவில்லை என்பது உண்மைதானா?

பண்டித பந்த்: இவ்வாறு கூறுவது முழுதும் உண்மையென்று நான் கருதவில்லை. சில மாதங்களுக்கு முன்பு சிற்சில கலவரங்கள் ஏற்பட்டதுண்டு. ஆனால் தற்போது கலவரமொன்றுமில்லை என்று நான் கேள்விப்பட்டேன்.

## ரஷ்யாவில் உலோக உற்பத்தி

மாஸ்கோ, டிச. 16—

பிரிட்டன், பிரான்ஸ், மேற்கு ஜெர்மனி ஆகிய மூன்று நாடுகளிலும் எவ்வளவு உலோகங்கள் உற்பத்தி செய்யப்படுகின்றதோ அவ்வளவு ரஷ்யாவில் உற்பத்தி செய்யப்படுகின்றது. என்பதுமட்டுமல்ல; மேற்கொண்டும் 9 கோடி டன் உலோகங்கள் கூடுதலாக உற்பத்தி செய்யப்படுகிறது.

## நீர்மட்டம்

சென்னை, டிச. 18—

| | | |
|---|---|---|
| மேட்டூர் | 17-12 | 114·9அடி |
| பெரியாறு | 16-12 | 45·0அடி |
| வைகை | 16-12 | 58·3அடி |
| பாபநாசம் | 15-12 | 144·2அடி |
| கிருஷ்ணகிரி | 17-12 | 45 5அடி |
| சாத்தனூர் | 17-12 | 99·3அடி |
| மணிமுத்தாறு | 15-12 | 99·6அடி |



## இன்றைய சினிமா

அசோக்—ஜவானி-கி-ஹவா
பாரத்—அருமை மகள் அபிராமி
பிரைட்டன்—HERCULIS
பிராட்வே—சகோதரி
காஸினோ—பொன்னு விளையும் பூமி
சித்ரா—பாகப் பிரிவினை
கிரெளன்—பாகப் பிரிவினை
ஈராஸ்—கடன் வாங்கி கல்யாணம்
கெயிட்டி—சகோதரி
காமதேனு—ரத்தக் கண்ணீர்
கபாலி—மரகதம்
கிருஷ்ணா—எங்கள் குல தேவி
லக்ஷ்மி—தெய்வமே துணை
மஹாலக்ஷ்மி—அருமை மகள் அபிராமி
மஹாராணி—சபாஷ் ராமு
மிட்லண்ட்—Holiday for Lovers
மினர்வா—Ask Any Girl
நியூ க்ளோப்—Voice in the Mirror
நியூ எல்பின்ஸ்டன்—The Captain's Table
நூர்ஜஹான்—அபலை அஞ்சுகம்
ஓடியன்—Time Limt
பிளாஸா—சோடி பேஹன்
பத்மனாபா—மாதர்குல மாணிக்கம்
பாரகன்—வஞ்சிக்கோட்டை வாலிபன்
பிரபாத்—பொன்னு விளையும் பூமி
ராஜகுமாரி—எங்கள் குல தேவி
ராக்ஸி—சகோதரி
செலக்ட்—நாகின்
சரஸ்வதி—பொன்னு விளையும் பூமி
சயானி—பாகப் பிரிவினை
ஸ்டார்—தில்-தேகே-தேகோ
சன்—வீர கடோத்கஜன்
தங்கம்—வீரகடோத்கஜன்
திருவெற்றியூர்: பிரதாப்—கணவனே கண்கண்ட தெய்வம்
திருமகள்—தெய்வமே துணை
உமா—எங்கள் குல தேவி
வீனஸ்—வீரபாண்டிய கட்டபொம்மன்
வெலிங்டன் எங்கள் குல தேவி
அரக்கோணம்: கற்பகம்—உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்
தாம்பரம்: G. R. தியேட்டர்—அமுதவல்லி
வேலூர்: நேஷனல் தியேட்டர் சகோதரி
பல்லாவரம்-ஜனதா—சகோதரி

# வயது வந்தோருக்கு ஓட்டுரிமை தரமாட்டாராம்!

## பார்லிமெண்டரி முறையும் பாக். மக்களின் இயல்புக்கு ஏற்றதல்லவாம்

### சர்வாதிகாரி அயூப்கான் பேச்சு

கராச்சி, டிச 18—

பாகிஸ்தான் அதிபர் முகம்மது அயூப்கான் இன்று ஒரு பொதுக் கூட்டத்தில் பேசுகையில், உத்தேசிக்கப்பட்டிருக்கும் அரசியல் சட்டக் கமிஷன் சிபார்சு செய்தாலும்கூட, வயது வந்தோர் ஓட்டுரிமை மூலம் பார்லிமெண்டுக்குத் தேர்தல் நடத்துவதை மத்திய சர்க்கார் என்றுமே ஒத்துக்கொள்ளாது என்று கூறினார்.

அவருடைய மேற்குப் பாகிஸ்தான் சுற்றுப் பிரயாணத்தின் போது கராச்சியிலிருந்து 300 மைல் தூரத்திலுள்ள மூல்தான் நகரத்தில் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசுகையில் ஒருவர் கேட்ட கேள்விக்குப் பதிலளிக்கையிலேயே அயூப்கான் அவ்விதம் கூறினார்.

வயது வந்தோருக்கு ஓட்டுரிமையின் அடிப்படையில் தேர்தல் நடத்தும் முறை பாகிஸ்தானுக்கு ஒத்துவராது என்ற தன்னுடைய நம்பிக்கையை கடந்த கால அனுபவம் நிரூபணம் செய்துள்ளது என்றும் பார்லிமெண்டரி முறை பாக் மக்களின் இயல்புக்கு ஏற்றதல்ல வென்றும் கூறினார்.

## நாவலர் பாரதியாருக்கு இறுதி வணக்கம்

மதுரை, டிச. 14—

மதுரை அரசாங்க மருத்துவ மனையில் காலமான பெருநாவலர் டாக்டர் ச. சோ. பாரதியின் சடலம் பசுமலையிலுள்ள அவரது இல்லத்துக்கு எடுத்துச் செல்லப்பட்டபின் 'ஜனசக்தி' துணை ஆசிரியர் மாஜினி, நகர கம்யூனிஸ்ட் தலைவர் எம். என். ஆதிநாராயணன் அங்குசென்றுஇறுதி மரியாதை செலுத்தினர்.

## தோழர் அஜய் கோஷ் மருத்துவ விடுதியில்

புதுடில்லி, டிச. 17—

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி பொதுச்செயலாளர் அஜய் கோஷ் இருதயக் கோளாறு காரணமாக இன்று வைத்திய விடுதியில் அனுமதிக்கப்பட்டார்.

ஒரு வார காலத்திற்கு வேலையினின்றும், ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டுமென்று வைத்தியர்கள் அவருக்கு யோசனை கூறியுள்ளதாக, இன்று கம்யூனிஸ்ட் கட்சிக் காரியாலயத்தினின்றும் வெளியிடப்பட்ட செய்திக் குறிப்பு ஒன்று கூறுகிறது.

## கரும்பு விலையை உயர்த்தும் தீர்மானம் தோல்வி

புதுடில்லி, டிச. 17—

உத்தரப் பிரதேசத்தில் கரும்பு உற்பத்தியாளர்கள் கரும்புவிலையை உயர்த்தக் கோரி வேலை நிறுத்தம் செய்துள்ளனரல்லவா? கரும்பு விலையை மணங்கு இரண்டு ரூபாயாக அதிகரிக்கக் கோரி மக்கள்சபையில் ஒரு தீர்மானம் வந்தது. இதை ஆதரித்து எஸ். எம். பானர்ஜி எம்.பி. உட்படப் பலர் பேசினார்கள். இரண்டு காங்கிரஸ் எம்.பி.க்களும் ஆதரித்தார்கள். ஆனால் உதவி உணவு மந்திரி தீர்மானத்தையெதிர்த்தார். தீர்மானம் தோற்கடிக்கப்பட்டது.

## நடக்கஇருப்பவை

அகில இந்திய எழுத்தாளர் மாநாடு. காலை 8.30 முதல் 2 30 வரை இந்திய நாவல் இந்திய இலக்கியத்தில் நிகழ்காலப் போக்குகள், மொழிபெயர்ப்புக் கலை பற்றிய விவாத அரங்கு 3-30க்கு பிரதிநிதிகள் பேசுவார்கள். 5-30க்கு இசை. 9க்கு குச்சிப்புடி நடனம். எஸ்.ஐ.இ. டி. கல்லூரியில்.

●

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி தியாகராய நகர் தொகுதிக்குழு சார்பில் 19-12-59 சனிக்கிழமை மாலை 6-30 மணியளவில் மாம்பலம் இராஜாஜி சேவாமன்றத்தில் மார்க்ஸிஸ அரசியல் வகுப்பு நடைபெறும். தோழர் பி. என். பி. கபூர் அவர்கள் வகுப்பு எடுப்பார்.

# அழுகும் பொருள் வியாபாரிகள் முதல் மந்திரியிடம் தூது

## அழுகும் பொருள்களுக்கு விற்பனை வரி விதிக்காதிருக்க கோரிக்கை

சென்னை, டிச. 19—

சென்னை மாகாண அழுகும் பொருள் வியாபாரிகள் சங்கத்தின் சார்பாக ஜி. அண்ணாமலை முத்துராஜா எம்.எல்.ஏ, தலைமையில் டி. குப்புசாமி நாயுடு, வி. பி. தங்கவேல் முதலியார், எஸ். சூரிய நாராயணன், எல். சுந்தரம் பிள்ளை, என். நடராஜ பிள்ளை, பி. என். சூரியராவ் ஆகியோரடங்கிய தூதுகோஷ்டி ஒன்று இன்று கோட்டையில் முதன் மந்திரி காமராஜரை பேட்டி கண்டனர். அடுத்து வர இருக்கும் பட்ஜெட்டில் அழுகும் பொருள்களுக்கு விற்பனை வரியிலிருந்து விலக்களிக்கும்படி கேட்டுக்கொண்டதுடன் ஏற்கனவே முதல் அமைச்சர் கொடுத்துள்ள வாக்குறுதிக்கிணங்க அடுத்த ஆண்டு வரிவிலக்கு கிடைக்குமென்று நம்புவதாகவும் தூது கோஷ்டி முதலமைச்சரிடம் கூறியது.

முதல் அமைச்சர் பதிலளிக்கையில் அழுகும் பொருள் வியாபாரிகளன் இந்த கோரிக்கை பட்ஜெட்டின்போது கவனிக்கப்படுமென்றும் ஆவன செய்வதாகவும் உறுதி கூறினார்.

அதன் பின்னர் மாநில சங்கத் தலைவர் டி. குப்புசாமி நாயுடு, வீ. பி. தங்கவேல் முதலியார், எஸ். சூரியநாராயணன், எல். சுந்தரம் பிள்ளை ஆகியோர்ரெவின்யூ போர்டுக்குச் சென்று மாநில விற்பனை வரி இலாகா காரியதரிசி ஆர். ஆர். விசுவாசத்தை சந்தித்தனர். சவுக்கி போஸ்டுகளில் அழுகும் பொருள்கள் மீது விற்பனை வரி வசூலிக்கப்படும் கெடுபிடியையும், அரசாங்க உத்தரவிற்கும் அமைச்சர்களின் வாக்குறுதிக்கும் மாறாக சிறிய வியாபாரிகளிடம் விற்பனை வரி வசூலிக்கப்படுகிறதென்றும், இதனால் பெரும் கஷ்டம் ஏற்பட்டிருக்கிறதென்றும் எடுத்துக் கூறினர். கமிஷனரிடம் மகஜர் ஒன்றையும் சமர்ப்பித்தனர். விற்பனை வரி இலாகா காரியதரிசி பதிலளிக்கையில் "சவுக்கி போஸ்டுகளில் வசூலிக்கப்பட வேண்டிய பொது உத்திரவு ஏற்கனவே அனுப்பப்பட்டதென்றும், அழுகும் பொருள் சம்பந்தமாக சவுக்கிகளில் எவ்வித வரி வசூலும் செய்யவேண்டியதில்லை என்று உடனடியாக உத்திரவு அனுப்பி வைக்கப்படுமென்றும் உறுதியளித்தார். —ந. நி.

## நாகர்கள் விஷமம்

இம்பால், டிச. 17—

ராணுவ உடை தரித்த சுமார் 70 நாகா கலகக்காரர்கள் துப்பாக்கி, உடைவாள் சகிதம் இங்கிருந்து 60 மைல் தொலைவிலுள்ள தடுபி என்னுமிடத்திலுள்ள பிளாக் அபிவிருத்தி காரியாலயத்தை டிச. 18-ந் தேதி தாக்கியுள்ளனர். டைப்ரைட்டர் கடிகாரம், தஸ்தாவேஜுகளைக் கவர்ந்து சென்றனர்.

# விதர்பா காங்கிரஸ்காரர்கள் ராஜினாமா வாபஸ்

பம்பாய், டிச. 17...

நாகபுரி பகுதியிலுள்ள 23 காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்கள், விதர்பா ராஜ்ய பிரச்சினையில் தங்களது சட்டசபை பதவியை ராஜினாமா செய்வதாகயிருந்த முடிவை வற்புறுத்தப் போவதில்லை என்றும் காங்கிரஸ் தலைவர் திருமதி இந்திரா காந்தியின் ஆலோசனைக்கு "உண்மையான கட்டுப்பாடுள்ளகாங்கிரஸ்" காரர்களாக செவி சாய்க்கத் தீர்மானித்துள்ளனர்.

இக்கோஷ்டியைச் சார்ந்த நரேந்தரா டிட்கி பத்திரிகை நிருபர்களிடையே பேசும் போது, காங்கிரஸ் தலைவர் இந்திரா காந்திக்கு தங்களின் முடிவை தெரிவித்துவிட்டதாகக் கூறினார்.

காங்கிரஸ் தலைவருக்கு அனுப்பிய கடைசி கடிதத்தில் இந்த 23 காங்கிரஸ்காரர்களும் கூறியிருப்பதாவது:

விதர்பா ராஜ்யத்தை மகாராஷ்டிராவோடு இணைப்பதற்கு காங்கிரஸ் செயற்குழு முடிவு செய்து விதர்பா மக்களின் நியாயமான அபிலாஷைகளை ஒதுக்கித் தள்ளியது துரதிர்ஷ்டமானது.

ஆனால் நேர்மையான கட்டுப்பாடுள்ள காங்கிரஸ்காரர்கள் என்ற முறையில், காங்கிரஸ் தலைவரின் கடிதம், நாகபுரி காங்கிரஸ் தலைவர் திருமதி கன்னம்வாரின் வேண்டுகோளுக்குப் பிறகு தங்கள் சட்டசபை உறுப்பினர் பதவியை ராஜினா:மா செய்வதை வற்புறுத்த மாட்டோம் என்று சொல்வதைத் தவிர வேறு வழியில்லை என்று கூறினார்.

## டாக்டர் பட்டாபி மறைவுக்கு ஜனாதிபதி அனுதாபம்

புதுடில்லி, டிச. 17—

டாக்டர் பட்டாபி சீதாராமையாவின் மறைவு குறித்து பட்டாபியின் மகனுக்கு எழுதியுள்ள கடிதமொன்றில் "உங்கள் தந்தையின் மரணச் செய்தி கேட்டு மிகவும் துயருற்றேன். அவர் எனது இனிய நண்பர்; நாட்டின் பெருந்தொண்டர். அவர் தமது வாழ்நாள் முழுவதையும் தேச சேவையில் ஈடுபடுத்தியிருந்தார். முதலில் போராட்ட வீரராகவும் சுதந்திரத்துக்குப்பின் சிறந்த நிர்வாகியாகவும் அவர் பணியாற்றினார். அவருடைய சேவைகள் பல்லாண்டுகள் வாழும்; அவை எதிர்கால சந்ததியினருக்கு உற்சாகமூட்ட வல்லன" என ஜனாதிபதி டாக்டர் ராஜேந்திரபிரஸாத் கூறியுள்ளார்.

## பஞ்சாப் அமைச்சரவை மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம்

சாந்திகார், டிச. 17—

பஞ்சாப் விதான்சபை எதிர்க்கட்சி உறுப்பினர்கள் பால்ராம்ஜி தாஸ் தாண்டன், டாக்டர் பல்தேவ் பர்காஷ் ஸாஹிராம் ஆகியோர் கொடுத்திருக்கும் நம்பிக்கையில்லாத் தீர்மானமொன்று வந்திருப்பதாகச் சபாநாயகர் இன்று அறிவித்தார்.

இது சம்பந்தமாகத் தமது முடிவை நாளை அறிவிப்பதாக அவர் கூறினார். இத் தீர்மானம் ராஜ்ய முதலமைச்சர் சர்தார் பிரதாப் சிங் கெய்ரோனுக்கு எதிரானது எனத் தெரிகிறது.

## கரும்பு உற்பத்தியாளர் வேலை நிறுத்த எதிரொலி

### எம்.பி.யும் எம்.எல்.ஏ.யும் கைது

லக்ஷ்மணபுரி, டிச. 17—

உத்தரப் பிரதேசத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ராம்சேவக் யாதவ் எம்.பி.யும், ஜங்பகதூர் வர்மன் எம். எல். ஏ.யும் கரும்பு உற்பத்தியாளர் வேலை நிறுத்தம் சம்பந்தமாகக் கைது செய்யப்பட்டுள்ளனர். உடன் தலையிட்டுக் கோரிக்கைகளை வழங்கும்படி பிரதமர் நேருவுக்கு சிபன்லால் சாக்சேனா எம். பி. தந்தியடித்திருக்கிறார்.

# இதுவரை 571 ஊழியர்கள் கைது!

## ம. பி. என். ஜி. ஓக்கள் ஸ்ட்ரைக் நிலவரம்

போபால், டிச. 17—

மத்யப்பிரதேச அரசாங்கஊழியர்களின் வேலை நிறுத்தம் இன்று 8-வது நாளாக நடை பெறுகிறது. வேலை நிறுத்தத்தால் பாதிக்கப்பட்ட 33-ல் 9 ஜில்லாக்களில் ஊழியர்கள் வேலைக்கு வந்து விட்டதாக சர்க்கார் தரப்பு செய்திகள் கூறின. மேலும் 4 ஜில்லாக்களில் வேலைக்கு வரும் ஊழியர்களின் எண்ணிக்கை அதிகரித்திருப்பதாகவும் அதிகாரிகள் கூறினர்.

**போராட்டக் கவுன்சில் அறிவிப்பு**

இன்னும் ஒரு லட்சத்திற்கு மேற்பட்ட ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்துவருவதாக ஊழியர்களின் போராட்டக் கவுன்சில் அறிவித்தது. இன்னும் பல ஊழியர்கள் கைது செய்யப்பட்டனர். இதுவரை கைது செய்யப்பட்டவர்களின் எண்ணிக்கை 571 ஆக உயர்ந்துள்ளது. இதுவரை 66 ஊழியர்களை (3-ம் வகுப்பு ஊழியவர்கள் 59 பேர்; நான்காம் வகுப்பு ஊழியர் 7 பேர்) சர்க்கார் வேலையிலிருந்து நீக்கியுள்ளது. 3-ம் வகுப்பு ஊழியர் எழுவர் 'சஸ்பெண்ட்' செய்யப்பட்டுள்ளனர்.

போபாலில் வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டுள்ள ஊழியர்கள் இன்று சர்க்கார் அலுவலகத்தின் முன் ஆர்பாட்டம் நடத்தினர். செக்ரடேரியட்டின் எல்லா வாயில்களிலும் பலமானபோலீஸ் படைகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன.

சர்க்கார் மாளிகை முன்னும், போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் காரியாலயம் முன்னும் பெண்கள் ஆர்பாட்டம் ஒன்றும் நடைபெற்றது. நிற்க, வேலை நிறுத்தத்தை உடைக்கத் தங்கள் சேவை அளிக்க, கருங்காலி வேலை செய்யத்தயார், என்று மத்யப்பிரதேசக் காங்கிரஸ் கமிட்டி சர்க்காரிடம் அறிவித்துள்ளது.

## "பெரிய மனிதர்களை" பற்றி விசாரிக்க நீதிமன்றம் ஏற்படாதாம்

புதுடில்லி, டிச. 19—

அவசியப்பட்டால், அமைச்சர்கள் உட்பட பல பெரிய மனிதர்களின் மீது கூறப்படும் குற்றச்சாட்டுகள்பற்றி விசாரணை செய்ய ஒரு உயர்மட்ட நீதிமன்றத்தை ஏற்படுத்தும் ஆலோசனை அரசிற்குக் கிடையாது என்று நேரு ஒரு கேள்விக்குப் பதிலளித்தார்.

## சென்னை ராஜ்ய வழக்கறிஞர் மகாநாடு

நாகர்கோவில், டிச. 18—

சென்னை ராஜ்ய வழக்கறிஞர்களின் பத்தாவது வருடாந்திர மகாநாடு டிசம்பர் 29, 30 தேதிகளில் இங்கு நடைபெறும்.

யூனியன் சட்ட அமைச்சர் திரு. ஏ. கே. சென் மகாநாட்டைத் துவக்கிவைப்பார். சென்னை உயர்நீதிமன்ற ஓய்வுபெற்ற நீதிபதி திரு. என். ராஜகோபால அய்யங்கார் தலைமை வகிப்பார்.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

அடிப்படையில் உங்கள் விமர்சனம் வெளிப்படுவதாக இருக்கக் கூடாது என்று ராஜாஜி கூறினார்.

எண்பது வயதான கிழவனான போதிலும் என்னை நீங்கள் மறக்காமல் பேசும் வாய்ப்புக் கொடுத்ததற்கு நன்றி. இந்த வயதில் என்னை நினைப்பவர்கள் இருக்கிறார்கள் என்பதை நினைக்க எனக்கு மகிழ்ச்சி உண்டாகிறது. சென்னைக்கு வருபவர்கள் என்னை பார்ப்பதோ அல்லது நான் அவர்களைப் பார்ப்பதோ இப்போது தவறாமல் நடக்கிறது. எனக்கு நானே ஞாபகச்சின்னம் என்று ராஜாஜி கூறினார்.

## வானொலி

### சென்னை 1

20—12—59

**காலை முதல் ஒலிபரப்பு**

6-55 மங்கள இசை 7-00 துதிப்பாடல்கள் திருப்பாவை திருவெம்பாவை, 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் வானிலை அறிவிப்பு 7-15 தமிழில் செய்தி, 7-30 டி. ரத்னவேலு வயலின், 8-00 மதுரகீதம் 8-15 எஸ். கல்யாணராமன் பாட்டு, ஆர். எஸ். கோபாலகிருஷ்ணன் வயலின், கோயமுத்தூர் என். ராமஸ்வாமி மிருதங்கம் 9-15 ஒலிபரப்பு முடிவு.

**இரண்டாவது ஒலிபரப்பு**

10-10 Second Cricket Test Between India & Australia Commentary (Relay from Delhi) 12-20 ஒலிபரப்பு முடிவு

**இரண்டாவது ஒலிபரப்பு (தொடர்ச்சி)**

12-30 கீர்த்தனைக் கோவை, 1-00 ஒலிப்பதிவுகள், 1-30 கானமஞ்சரி 1-40 ஹிந்தியில் செய்தி 1-50 இசைச் செண்டு 2-00 தமிழில் செய்தி 2-10 Cricket Commentary 3-00 இடைவேளை 3-10 Cricket Commentary 5-00 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

**மூன்றாவது ஒலிபரப்பு**

5-30 புரந்தரதாசர் சாஹித்யங்கள், 6-05 பிராந்தியச் செய்திகள் 6-15 கிராம நிகழ்ச்சிகள் (திருச்சி அஞ்சல்) 7-15 தமிழில் செய்தி 7-30 சென்னை சட்டசபை நடவடிக்கைகள் விமர்சனம் 7-40 குன்னக்குடி வைத்தியநாதன் வயலின் 8-00 கோமாட்டில் ஜானகி பாட்டு 8-30 Matters of Moment Talk (Relay from Delhi) 8-45 இசை மாலை 9-00 எஸ். நடராஜன் பாட்டு 9-30 நாட்டுப் பாடல்கள் 9-50 இன்னிசை 10-00 பக்தி ரஞ்சனி 10-30 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

### திருச்சி

20—12—59

**காலை முதல் ஒலிபரப்பு**

7-00 இசைக்கதிர் திருப்பாவை திருவெம்பாவை 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் 7-15 தமிழில் செய்தி 7-30 ஒலிப்பதிவுகள் 8 00 ஆங்கிலத்தில் செய்தி 8-15 எஸ். கல்யாணராமன் பாட்டு (சென்னை அஞ்சல்) 9-15 ஒலிபரப்பு முடிவு.

**இரண்டாவது ஒலிபரப்பு**

12-00 நீங்கள் கேட்டவை 12-30 சூர்யகாந்தி கதம்ப நிகழ்ச்சி 1-00 மணி மலர் 1-40 ஹிந்தியில் செய்தி 1-50 குரல் இசை 2-00 தமிழில் செய்தி 2-10 வாத்ய இசை 2-30 மெல்லிசை 3 00 சென்னை அஞ்சல் 4-00 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

**மாலை மூன்றாவது ஒலிபரப்பு**

4-45 விவித பாரதி கர்நாடக சங்கீத நிகழ்ச்சி (பம்பாய் அஞ்சல்) 5-45 இசைப் பயிற்சி 6-00 அறிவிப்புகள் 6-05 பிராந்தியச் செய்திகள் 6-15 கிராம நிகழ்ச்சிகள் 7 15 தமிழில் செய்தி 7-30 சென்னை சட்டசபை நடவடிக்கைகள் விமர்சனம் (சென்னை அஞ்சல்) 7-40 இடைவேளை சங்கீதம் 7-45 கே. சரோஜா பாட்டு 8-30 டெல்லிஅஞ்சல்8-45 கேசரோஜா பாட்டு9-00 ஆங்கிலத்தில் செய்தி 9-15 இசைவிருந்து 9-30 துதிப் பாடல்கள் 10-00 ஒலிபரப்பு முடிவு.

ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு, வெளியிட்டவர் எம். கிருஷ்ணசாமி
ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.
முகவரி: 32, பிராட்வே, சென்னை-1
Janasakthi